# கிருஷ்ணர் இன்பத்தின் இருப்பிடம்

தெய்வத்திரு
அ.ச. பக்திவேதாந்த
சுவாமி பிரபுபாதர்
அகில உலக கிருஷ்ண பக்தி
இயக்கத்தின் ஸ்தாபக ஆச்சாரியர்

# கிருஷ்ணர்

## இன்பத்தின் இருப்பிடம்

## Kṛṣṇa The Reservoir of Pleasure

தெய்வத்திரு
அ.ச. பக்திவேதாந்த சுவாமி பிரபுபாதர்
அகில உலக கிருஷ்ண பக்தி இயக்கத்தின் ஸ்தாபக ஆச்சாரியர்



பக்திவேதாந்த புத்தக அறக்கட்டளை

தெய்வத்திரு அ.ச. பக்திவேதாந்த சுவாமி பிரபுபாதரால் விளக்கப்பட்டு தமிழில் மொழிபெயர்க்கப்பட்டுள்ள புத்தகங்கள்:

- பகவத் கீதை உண்மையுருவில்
- ஸ்ரீமத் பாகவதம் (12 காண்டம், 18 புத்தகங்கள்—சீடர்களுடன் இணைந்து)
- கிருஷ்ணர், புருஷோத்தமராகிய முழுமுதற் கடவுள்
- தன்னையறியும் விஞ்ஞானம்
- அறிவின் அரசன்
- பிற கிரஹங்களுக்கு எளிதான பயணம்
- கிருஷ்ணருக்கான வழியில்
- பிரகலாதரின் திவ்ய உபதேசங்கள்
- பக்குவமான கேள்விகளும் பக்குவமான பதில்களும்
- யோகத்தின் பூரணத்துவம்
- வேதம் வழங்கும் அறிவு
- சவால்
- அமைதியான வாழ்வுக்கு வழி
- உபதேசாமிருதம்
- உயிரிலிருந்து உயிர் தோன்றுகிறது
- கிருஷ்ண உணர்வு, ஈடு இணையற்ற வரம்
- கிருஷ்ணர், இன்பத்தின் இருப்பிடம்
- கீதாசாரம்
- கர்ம யோகம்
- இயற்கையின் சட்டங்கள்
- வைஷ்ணவ ஆச்சாரியர்களின் பாடல்கள்
- கிருஷ்ண உணர்வும் கிறிஸ்துவமும்
- பக்தி ரஸாம்ருத சிந்து
- குந்தி மகாராணியின் போதனைகள்
- பகவான் ஸ்ரீ கபிலரின் யோகமுறை
- இறப்பிற்கும் பிறப்பிற்கும் அப்பால்
- ஆன்மீக வாழ்க்கை
- கிருஷ்ண உணர்வு, மிக உன்னத யோகம்
- பக்குவநிலைக்கான வழி
- தர்மம், தெய்வீக நிலையை அடைவதற்கான வழி
- நாரத-பக்தி-சூத்திரம் (சீடர்களுடன் இணைந்து)
- முகுந்தமாலை (சீடர்களுடன் இணைந்து)
- பகவத் தரிசனம், பத்திரிகை (ஸ்தாபகர்)

# பொருளடக்கம்

இப்புத்தகத்தைப் பற்றிய விஷயங்களில் ஆர்வமுடையவர்கள் கீழ்க்கண்ட முகவரியோடு தொடர்பு கொள்ளவும்.

**The Bhaktivedanta Book Trust**
**Hare Krishna Land**
**Juhu, Mumbai 400 049, India**

**Website / Email:**
www.indiabbt.com
admin@indiabbt.com

**Kṛṣṇa The Reservoir of Pleasure (Tamil)**

1st to 13th printings : 2,13,000 copies
14th printing, February 2020 : 50,000 copies



**ISBN : 978-93-83095-42-1**



Published & Printed by
The Bhaktivedanta Book Trust.

**ET6N**

# 1

# இன்பத்தின் இருப்பிடம்

கிருஷ்ண - இது ஒரு உன்னதமான சப்தம். கிருஷ்ண என்றால் மிக உயர்ந்த ஆனந்தம் அல்லது இன்பம் என்று பொருள். எல்லா உயிரினங்களும் இன்பத்தைத் தேடி அலைகின்றன. ஆனால் பௌதிக நோக்குள்ள இந்த வாழ்க்கையில், நாம் இன்பத்தை பூர்த்தி செய்து கொள்ள நினைக்கும் ஒவ்வொரு அடியிலும் குழப்பத்தையே சந்திக்கிறோம். இன்பத்தை அனுபவிப்பதற்கான உண்மையான தகவல் நம்மிடம் இல்லாததே இதற்கு காரணம். ஒருவன் உண்மையான இன்பத்தை அனுபவிக்க வேண்டும் என்று நினைத்தால், முதலில் அவன், தான் இந்த உடல் அல்ல, தான் ஒரு உணர்வு என்பதை உணர வேண்டும். உணர்வு என்பது கூட சரியாகாது. ஏனென்றால் உணர்வே நம்முடைய உண்மை நிலைக்கான அறிகுறி. அதாவது நான் ஒரு ஆத்மா, நான் தற்பொழுது இந்த பௌதிக உடலுடன் இணைந்துள்ளேன். தற்கால பௌதிக விஞ்ஞானிகள் இந்த பௌதிக விஷயத்திற்கு அவ்வளவு முக்கியத்துவம் கொடுப்பதில்லை. இதனால்தான் அவர்கள் சில சமயங்களில் ஆத்மாவைப் பற்றி அறிந்து கொள்வதில் திசை திருப்பப்படுகிறார்கள். ஆனால் தூய ஆத்மா என்பது உண்மையே. இதை ஒவ்வொருவரும் தமது உணர்வின் மூலம் உணரலாம். தூய உணர்வே தூய ஆத்மாவின் அறிகுறி என்பதை எந்தக் குழந்தையும் புரிந்து கொள்ளும்.

பகவத் கீதையிலிருந்து நாம் கற்றுக்கொள்வது ஒரு ஜீவாத்மா என்ற உணர்வு நிலைக்கு நம்மை கொண்டு வருவதே ஆகும். இந்நிலைக்கு நாம் வந்துவிட்டால், இன்னொரு முறை "நான் இந்த உடல்" என்ற உணர்வின் மட்டத்திற்கு தள்ளப்பட மாட்டோம். இதனால் இந்த உடல் அழியும் தருவாயில் நாம் பௌதிகக் களங்கங்களில் இருந்து விடுபட்டு, நம்முடைய

ஆன்மீக வாழ்க்கை புதுப்பிக்கப்பட்டு விடும். இத்தகைய நிலையில் நாம் இந்த உடலை விட்டு நீங்கிய பிறகு நம்முடைய அடுத்த பிறவியில் அடையும் வாழ்க்கையானது முழுமையான, நித்தியமான ஆன்மீக வாழ்க்கையாகி விடுகிறது.

இந்த உடல் அழிக்கப்பட்டவுடன் உணர்வு அழிந்து விடுவதில்லை. மாறாக இன்னொரு உடலுக்கு அது மாற்றப்படுகிறது. மீண்டும் இன்னொரு முறை அதற்கு வாழ்க்கையின் பௌதிக கொள்கை உணர்த்தப்படுகிறது. இதுவும் பகவத் கீதையில் கூறப்பட்டுள்ளது. நாம் இறக்கும் தருவாயில் நம்முடைய உணர்வு தூய்மையானதாக இருக்குமாயின், நாம் நிச்சயமாக கூறலாம், நம்முடைய அடுத்த வாழ்க்கையானது பௌதிகமாக அல்லாமல் ஆன்மீகமானதாகவே இருக்கும். நம்முடைய உணர்வு மரணத் தருவாயில் தூய்மையாக இல்லாத பட்சத்தில் நாம் இந்த உடலை விட்ட பிறகு மீண்டும் ஒரு ஜட உடலையே அடைய வேண்டி இருக்கும். இந்த முறையே இப்பொழுது தொடர்ந்து கொண்டிருக்கிறது. ஏனென்றால் இது இயற்கையின் நியதி.

நாம் இப்பொழுது ஓர் அளவிற்குட்பட்ட உடலை உடையவராகவே இருக்கிறோம். நாம் காணும் இந்த உடலானது ஸ்தூல உடலாகும். இது ஒரு சட்டையும், கோட்டும் போன்றது; அதாவது கோட்டின் உள்ளே ஒரு சட்டை உள்ளது. அந்த சட்டையின் உள்ளே ஓர் உடல் உள்ளது. இதே போல் தான் தூய்மையான ஆத்மாவும் ஒரு சட்டையாலும், கோட்டாலும் மூடப்பட்டிருக்கிறது. ஆனால் இங்கே மூட உபயோகப்படுத்தப்பட்டுள்ள உடைகள், மனம், அறிவு, பொய் அகங்காரம் என்ற மூன்றே ஆகும். பொய் அகங்காரம் என்பது, தான் ஒரு ஜடம் என்றும், தான் இந்த பௌதிக உலகத்தின் உற்பத்திப் பொருள் என்றும் தவறான அபிப்பிராயம் கொள்வதேயாகும். இந்த தவறான எண்ணம் நம்மை ஒரு எல்லைக்குள் அடைத்துவிடுகிறது. எடுத்துக்காட்டாக, நான்

இந்திய மண்ணில் பிறந்ததால், நான் ஒரு இந்தியன் என்று நினைத்துக் கொள்கிறேன். ஆனால் தூய ஆத்மா என்ற நிலையில் நான் இந்தியனும் அல்ல, அமெரிக்கனும் அல்ல; நான் ஒரு தூய ஆத்மா. அமெரிக்கன் அல்லது இந்தியன், ஜெர்மன் அல்லது வெள்ளைக்காரன்; பூனை அல்லது நாய், தேனீ அல்லது வௌவ்வால், ஆண் அல்லது பெண் போன்றவைகள் எல்லாம் ஒரு பட்டங்களாகும். ஆனால் ஆன்மீக உணர்வில் இத்தகைய அனைத்து பட்டங்களிலிருந்து நாம் விடுபடலாம். உன்னத ஆத்மாவாகிய கிருஷ்ணரிடம் எப்பொழுதும் தொடர்பு வைத் திருப்பதின் மூலம் நாம் இந்த விடுதலையைப் பெறலாம்.

அகில உலக கிருஷ்ண பக்தி இயக்கத்தின் நோக்கமானது, நம்மை எப்பொழுதும் கிருஷ்ணருடைய தொடர்பிலேயே வைத்திருப்பதாகும். கிருஷ்ணர் நம்மிடம் நிரந்தரமான சகோதரத்துவத்துடன் இருப்பார். ஏனென்றால் அவர் சர்வ வல்லமை உடையவர். அவர் தன்னுடைய சொற்களின் மூலம் நம்மிடம் முழுமையான தொடர்பை வைத்துக் கொள்ள முடியும். அவருடைய சொற்களுக்கும், அவருக்கும் எந்த வித்தியாசமும் இல்லை. இது தான் சர்வ வல்லமை என்பது. சர்வ வல்லமை என்றால் அவருடன் சம்பந்தப்பட்டவைகள் எல்லாம் அவருடைய பலத்துக்கு சமமான பலத்தை உடையது ஆகும். எடுத்துக்காட்டாக இந்த பௌதிக உலகில் நமக்குத் தாகம் ஏற்பட்டு "தண்ணீர், தண்ணீர், தண்ணீர்" என்று கூறிக் கொண்டிருந்தால் தாகம் தீராது. ஏனென்றால் இந்த சொல்லுக்கு தண்ணீரைப் போன்ற சக்தி இல்லை. அந்த தண்ணீர் என்பது ஒரு சொல்லாக அல்லாமல் ஒரு பொருளாகக் கிடைக்கும் பொழுது தான் தாகம் தீருகிறது. ஆனால் ஆன்மீக உலகத்தில் இது போன்ற வேறுபாடுகள் கிடையாது. கிருஷ்ணரின் பெயர், கிருஷ்ணரின் தன்மை, கிருஷ்ணரின் சொல் - எல்லாம் கிருஷ்ணரே, அது மட்டுமல்லாமல் எல்லாமே ஒரே திருப்தியையே தருகிறது.

சிலரது வாதம் என்னவென்றால், "அர்ஜுனன் கிருஷ்ணரிடம் பேசும்பொழுது அவர் முன் கிருஷ்ணர் இருந்தார். ஆனால் என் முன் கிருஷ்ணர் தற்பொழுது இல்லையே. அதனால் எனக்கு வழிகாட்டக் கூடியவர் யார்?" என்பது. ஆனால் கிருஷ்ணர் தன்னுடைய வார்த்தைகளின் மூலம் இப்பொழுதும் இருக்கிறார். "பகவத் கீதை". இந்தியாவில் நாம் பகவத் கீதை பற்றியோ, ஸ்ரீமத் பாகவதத்தைப் பற்றியோ பேசும் பொழுது, நாம் அவற்றிற்கு, கடவுளை வழிபடுவதுபோல், புஷ்பங்களாலும், மற்ற உபகரணங்களாலும் பூஜை செய்கின்றோம். சீக்கிய மதத்தில் உருவம் இல்லாத போதிலும், அவர்கள் குரு கிரந்தசாஹிப் என்ற புத்தகத்தை வழிபடுகிறார்கள். இதேபோல் தான் முஸ்லீம்கள் குரானையும் கிறிஸ்துவர்கள் பைபிளையும் வழிபடுகிறார்கள். உண்மை என்னவென்றால் கிறிஸ்து தன் சொற்களின் மூலம் இருக்கிறார். அதேபோல் தான் கிருஷ்ணர் தன்னுடைய சொற்களின் மூலம் இருக்கிறார்.

உன்னத உலகத்திலிருந்து வரும் புருஷர்கள், கடவுளாகவோ அல்லது கடவுளின் குமாரனாகவோ இருந்தாலும், தங்களுடைய உன்னத தன்மைகளை இந்த பௌதிக உலகின் மாசுகளால் களங்கப்படாமல் வைத்திருக்கிறார்கள். இதுவே அவர்களின் சர்வ வல்லமை. நாமெல்லாம் "கடவுள் சர்வ வல்லமை படைத்தவர்" என்று கூறுகிறோம். அதன் பொருள் என்னவென்றால், பகவானுக்கும் அவருடைய பெயருக்கும், தன்மைக்கும், லீலைகளுக்கும், கட்டளைகளுக்கும் எந்த விதமான வித்தியாசமும் இல்லை என்பதாகும். ஆகவே பகவத் கீதையின் உரையாடல்கள், கிருஷ்ணருடன் உரையாடியதற்கு ஒப்பாகும்.

கிருஷ்ணர் உன்னுடைய இதயத்தில் மட்டுமல்லாமல், என்னுடைய இதயத்திலும் இருக்கிறார். ஈஸ்வர: சர்வ பூதானாம் ஹ்ருத்-தேசேஷ 'ர்ஜுன திஷ்டதி. பகவான் ஒவ்வொருவருடைய இதயத்திலும் இருக்கிறார். பகவான் நம்மிடமிருந்து விலகி

இல்லை. அவர் மிகவும் சிநேகம் நிறைந்த காரணத்தால்தான் நம்முடைய மாறுபாடு உள்ள தொடர் பிறப்புகளிலும் நம்முடனேயே இருக்கிறார். அவர் எப்பொழுது அவரை நோக்கி திரும்புவோம் என்று காத்துக் கொண்டு இருக்கிறார். அவர் மிகவும் கருணை நிறைந்த காரணத்தால் நாம் அவரை மறந்தாலும் நம்மை அவர் மறப்பதில்லை. ஒருவேளை மகன், தந்தையை மறந்தாலும், தந்தை அவனை மறப்பதில்லை. அதேபோல் தான் ஒவ்வொரு பொருளின், உடலின், உயிர்வாழியின் மூலத் தந்தையாகிய பகவான் நம்மை கைவிடுவதில்லை. நாம் பல உடல்களை உடையவர்கள். அது சட்டை, கோட் போன்றது. நான் ஒரு தூய்மையான ஆத்மா என்பதே ·நம்முடைய உண் மையான தன்மை. இந்த ஆத்மாவானது பகவானை சேர்ந்த ஒரு பகுதியே.

இந்த பௌதிக உலகில் மொத்தம் 84,00,000 உயிரின வகை கள் உள்ளன. உண்மையில் உயிரினவாதிகளாலும், மனித சாஸ்திரவாதிகளாலும் கூட துல்லியமாக கூறப்பட முடியாத இந்த தகவல்களை நாம் நம்பத் தகுந்த சாஸ்திரங்களிலிருந்து அறிகிறோம். இந்த 84,00,000 வகைகளில் மனித இனம் 4,00,000, மற்ற இனங்கள் 80,00,000 ஆகும். ஆனால் கிருஷ்ணராகிய உன்னத பகவானோ மிருகமானாலும், மனிதனானாலும், பாம்பானாலும், தேவரானாலும் சிறு தேவதையானாலும் - எதுவானாலும் உண்மையில் அவைகள் எல்லாம் என்னுடைய குழந்தைகள் என்று உரிமை கொண்டாடுகிறார். விதை தந்தையால் கொடுக்கப்பட்டு, தாயால் பெறப்படுகிறது. உடல் தாயின் உடலுக்கேற்றார் போல் உருவாகிறது. அந்த உடல் முழுவதும் வளர்ச்சி அடைந்த பிறகு வெளிவருகிறது - பூனை, நாய், மனிதன் என ஏதாவது ஒன்றிலிருந்து. இதுவே இன விருத்தியின் முறை. தந்தை விதையைக் கொடுக்கிறார். பிறகு அந்த விதை தாயின் கருப்பையில் உள்ள இரண்டு சுரப்பிகளில் இருந்தும் சுரக்கும் இரண்டு விதமான நீர்களில் கரைக்கப்படுகிறது. உடனே

உடல் சிறிய அளவிற்கு உருவாகி, பிறகு படிப்படியாக அது வளர்கிறது. முதலில் ஒன்பது துளைகள் உருவாகிறது: இரண்டு காதுகள், இரண்டு கண்கள், நாசித்துவாரம், ஒரு வாய், ஒரு நாபி, ஒரு பிறப்பு உறுப்பு, ஒரு மலவாய்.

நம்முடைய பூர்வ கருமங்களையும், செயல்களையும் அனுபவிப்பதற்கோ அல்லது துன்புறுவதற்கோ ஏற்றார் போல் தான் நாம் இந்த உடலைப் பெறுகிறோம். இதுவே பிறப்பு, இறப்பின் முறை. ஒருவன் இந்த வாழ்க்கையை முடித்த பிறகு மற்றொரு முறை இறந்து, இன்னொரு தாயின் கருப்பையில் நுழைகிறான். வெளியே வரும் பொழுது இன்னொரு விதமான உடலில் வருகிறான். இதுவே மறுபிறப்பின் முறை ஆகும். பிறப்பு, இறப்பு என்று தொடரும் உடல் மாற்றத்தை எவ்வாறு நிறுத்துவது என்பதில் நாம் மிகவும் அக்கறை உள்ளவர்களாக இருக்க வேண்டும். அதுவே இந்த மனித வாழ்வின் தனிப்பட்ட உரிமை. நாம் இந்த சுழற்சியை நிறுத்தலாம். நாம் நம்முடைய உண்மையான ஆன்மீக ரூபத்தை மீண்டும் பெற்று, பேரானந்தத்து டனும், முழு அறிவுடனும், நித்தியமான ஆன்மீக வாழ்க்கையை அடையலாம். இதுவே பரிணாம வளர்ச்சியின் நோக்கம். நாம் இதை நழுவவிடக் கூடாது.

விடுதலைக்கான முழு முறையானது, இப்பொழுது நாம் ஆரம்பித்தது போல் பகவானின் நாமத்தை பாடுவது, கேட்பதிலிருந்து ஆரம்பிக்கிறது. ஹரே கிருஷ்ண, ஹரே கிருஷ்ண, கிருஷ்ண கிருஷ்ண, ஹரே ஹரே, ஹரே ராம, ஹரே ராம, ராம ராம ஹரே ஹரே என்ற கடவுளின் இந்த புனித நாமத்தைக் கேட்பதும், பகவத் கீதையின் உண்மையைக் கேட்பதும் பகவானுடன் உடல் நிலையில் சம்பந்தப்படும் அளவிற்கு உயரியதாகும் என்பதை உங்களிடம் நான் குறிப்பிட விரும்புகிறேன். இந்த முறையே கீர்த்தனம் எனப்படுகிறது. இது கீதையில் குறிப்பிடப்பட்டுள்ளது. ஒருவன் மொழியை புரிந்துகொள்ளாத நிலையிலும் தொடர்ந்து அதை கேட்பதன்

மூலம், அவன் சிறிதளவு பக்தியை பெறுகிறான். இத்தகைய செயல்கள் அவனை பக்தியுள்ள வாழ்க்கைக்கு அழைத்துச் செல்கிறது - அதற்கு அவ்வளவு சக்தியுள்ளது. கிருஷ்ணர் சம்பந்தமான இரண்டு விதமான விவாதங்கள் உள்ளது. அதில் ஒன்று பகவத் கீதை. அது கிருஷ்ணரால் பேசப்பட்டது. இரண்டாவது விவாதம் ஸ்ரீமத் பாகவதமாகும். அது கிருஷ்ணரைப் பற்றி பேசப்பட்டது. எனவே இரண்டு விதமான கிருஷ்ண கதாக்கள் (விவாதங்கள்) உள்ளன. இரண்டும் சம அளவு சக்தி கொண்டது, ஏனென்றால் அவை கிருஷ்ணருடன் தொடர்புடையது.

பகவத் கீதை குருக்ஷேத்திர போர்க்களத்தில் பேசப்பட்டதால், நமக்கு அந்தப் போர்க்களத்தோடு செய்ய வேண்டியது என்ன இருக்கிறது என்று சிலர் கேட்கலாம். உண்மையில் அந்தப் போர்க்களத்தோடு செய்யவேண்டியது எதுவும் நமக்கில்லை. ஆனால் நாம் ஆன்மீக உலகின் அறிவை நாடிச் செல்கிறோம். அப்படி இருக்கையில் ஏன் அந்தப் போர்க்களத்தைப் பற்றி கவலைப்பட வேண்டும்? அது ஏனென்றால் அந்தப் போர்க்களத்தில் கிருஷ்ணர் இருந்தார். அதனால் அந்த இடமே கிருஷ்ண மயமாக்கப்பட்டு இருந்தது. இது எப்படி ஒரு உலோகத்தின் வழியாக மின்சாரத்தை பாய்ச்சும் பொழுது மித மிஞ்சிய மின்சார சக்தியை அந்த உலோகம் பெறுகிறதோ அதைப் போன்றது. அதைப் போல் தான் கிருஷ்ணர் விருப்பப்படும் பொருளும், கிருஷ்ணத்துவத்தை அல்லது கிருஷ்ணரின் தன்மையை அடைகிறது. இந்தக் காரணத்தால் தான் இப்பொழுது நாம் அந்தப் போர்க்களத்தைப் பற்றி பேச வந்தது. இதுவே கிருஷ்ணரின் சர்வவல்லமை எனப்படும்.

இந்த சர்வவல்லமை ஸ்ரீமத் பாகவதத்திலும் விளக்கப்பட்டுள்ளது. பல கிருஷ்ண கதாக்கள் உள்ளன. வேத இலக்கியங்கள் முழுவதும் இந்த கிருஷ்ண கதாக்களையே கொண்டவை.

வேதங்கள் என்றால் கிருஷ்ண கதாக்கள் என்று சொல்லும் அளவிற்கு இருக்கிறது. வேதங்கள் உட்பட அனைத்து வேத புத்தகங்களும் தன்னுள் மாறுபட்டவையாக தோன்றிடினும், அவை அனைத்தும் கிருஷ்ண கதைகளுக்கானவையே. நாம் இப்படி சாதாரணமாக கிருஷ்ணரைப் பற்றிய விவரங்களை அறிவதின் பயன் என்ன? அது தூய உன்னதமான அதிர்வாகும். அதை அறிவதின் விளைவு ஆன்மீக உணர்வாகும்.

நாம் நம்முடைய பலப்பல பிறப்புகளில் அடைந்த பௌதிக களங்கங்களின் வாயிலாகப் பெற்ற அமங்கள மானவற்றை எல்லாம் நம்முடைய இதயத்தில் சேர்த்து வைத்துள்ளோம். பலப்பல பிறப்புகள் - இந்த பிறப்பு மட்டுமல்ல, முந்தைய பிறப்புகளாலும் கூட. கிருஷ்ண கதாவின் மூலம் நாம் நம்முடைய இதயத்தை ஆராயும் பொழுது நாம் சேர்த்து வைத்துள்ள களங்கங்கள் எல்லாம் கழுவப்படுகிறது. நம்முடைய இதயத்தில் உள்ள அழுக்குகள் எல்லாம் கழுவப்படுகிறது. இதன் பிறகு நாம் தூய்மையான உணர்வை அடைகிறோம்.

ஒருவருடைய பொய்யான பதவிகளை எல்லாம் வேரறுப்பது என்பது அவ்வளவு சாதாரண காரியமல்ல. எடுத்துக்காட்டாக நான் ஒரு இந்தியன். ஆனால் நான் உடனடியாக ஒரு இந்தியன் அல்ல, நான் ஒரு தூய ஆத்மா என்று கூறுவது அவ்வளவு சாதாரணமான காரியம் அல்ல. இதே போல் தான் ஒருவன் தன் உடல் நிலைமைக்கான அடையாளங்களிலிருந்து விடுபடுவது கடினம். ஆனால் நாம் அப்படியும் தொடர்ந்து கிருஷ்ண கதாவையே கேட்போமானால், அது சுலபமாகிவிடும். இதை ஒரு சோதனையாக செய்து பாருங்களேன். அவ்வாறு செய்யும் பொழுது, உங்களுக்கு அந்த பொய்யான தன்மைகள் அல்லது பதவிகளில் இருந்து விலகுவது எவ்வளவு சுலபமாக உள்ளது என்பதைப் பாருங்கள். உண்மையில் மனதில் உள்ள அழுக்கு களை உடனே விலக்குவது என்பது கடினமே. ஆனால் நம்மீதான பௌதிக இயற்கையின் ஆதிக்கத் தன்மை உடனடியாக குறைவதை நாம் காணலாம்.

பௌதிக இயற்கை மூன்று விதமான குணங்களின் கீழ் இயங்குகிறது - அதாவது சத்வ, ரஜோ, தமோ. தமோ என்பது பயனில்லா வாழ்க்கை. ரஜோ பௌதிகமானது. ரஜோ குணத்தால் செலுத்தப்படுபவன் பொய்யான இன்பத்தை அடைய விரும்புகிறான். அவனுக்கு உண்மை எது என்று தெரியாத காரணத்தினால், அவன் இந்த ஜடத்தை அனுபவிப்பதற்காக தன்னுடைய உடலில் உள்ள சக்தியை பிழிய நினைக்கிறான். இதுவே ரஜோ குணம் எனப்படுகிறது. அறியாமை குணத்தில் இருப்பவர்களுக்கு, நற்குணமோ அல்லது தீவிர குணமோ இருப்பதில்லை. அவர்கள் வாழ்க்கையின் மிக அறியாமை இருளில் இருக்கிறார்கள். ஆனால் நற்குணத்தில் அமைந்திருப்பதால் குறைந்தபட்சம் விவாத அளவிலாவது, நான் யார், உலகம் என்பது என்ன, கடவுள் யார், அவரோடு நமக்கு என்ன உறவு என்பவைகளை புரிந்து கொள்ளலாம். இது சத்வ குணமாகும்.

கிருஷ்ண கதாவை கேட்பதன் மூலமே நாம் அறியாமை மற்றும் ரஜோ நிலைகளில் இருந்து விடுபடலாம். அப்படியாக விடுபட்ட பின் நாம் சத்வ குணத்தில் நிலை பெறலாம். அப்படி இல்லை என்றால் கூட நாம் உண்மையான அறிவையாவது பெறலாம் - நாம் யார் என்பதை அறியும் அறிவே உண்மையான அறிவு. மிருக வாழ்க்கை துன்பங்கள் நிறைந்தது, ஆனால் மிருகங்களுக்கோ தாம் கஷ்டப்படுகிறோம் என்பது தெரியாது. அறியாமை என்பது மிருக நிலை வாழ்க்கை ஆகும். உதாரணமாக பன்றியின் நிலையில் பன்றியானது எப்படிப்பட்ட துன்பமான வாழ்க்கையில் உள்ளது என்பதை கவனியுங்கள். அசுத்தமான இடங்களில் வாழ்ந்து எப்பொழுதும் சுத்தமற்றதாக இருக்கிறது. இப்படி ஒரு சூழ்நிலையில் இருந்தும், பன்றியானது மலத்தை உண்பதிலும், பெண் பன்றியுடன் தொடர்ந்து உடல் உறவு கொள்வதிலுமே இன்பத்தைக் காண்கிறது. அதன் உடலும் பெருக்கிறது. பன்றியின் இன்பம் புலன் மட்டத்திலான

இன்பமாக இருந்த பொழுதிலும், அதை அனுபவிப்பதற்கான தூண்டுதல் அதில் உள்ளது. இந்த காரணத்தால்தான் பன்றி கொழுத்துக் கொண்டே செல்கிறது.

இரவும், பகலும் கடுமையாக உழைத்து, பிறகு சிறிது உடலுறவு கொண்டுவிட்டு - நாம் இந்த வழியில் இன்பமாக இருக்கிறோம் என்று நினைக்கிறோம். ஆனால் இது இன்பமல்ல. இது பாகவதத்தில் பன்றியின் இன்பம் என்று வர்ணிக்கப்பட்டுள்ளது. மனிதனின் இன்பம் அவன் சத்வ குணத்தில் இருப்பதே. அதன் பிறகு அவன் உண்மையான இன்பத்தை அறியலாம்.

நாம் நம்முடைய அன்றாட வாழ்க்கையில் கிருஷ்ண கதாவை கேட்பதன் மூலம், நம்முடைய பல பிறப்புகளின் வாயிலாக நம்முடைய இதயத்தில் படிந்துள்ள அழுக்குகளை கழுவ முடியும். இன்னும் சொல்லப்போனால், நாம் இப்பொழுது அறியாமையிலோ அல்லது தீவிர உணர்ச்சியிலோ தொடர்ந்து இல்லை என்பதையும், ஆனால் சத்வ குணத்தில் உள்ளோம் என்பதையும் உணரலாம். அப்படியானால் அந்த நிலைமை என்ன?

நாம் வாழ்க்கையின் எந்த சூழலிலும் இன்பமாக இருப்பதை அறியலாம். இனி எப்பொழுதும் ஒரு வருத்தம் தோய்ந்த சிடுசிடுப்புடன் இருக்க மாட்டோம். இதுவே பிரம்ம பூதா (நற்குணத்தின் உயரிய நிலை) நிலை என்று பகவத் கீதையில் காண்கிறோம். நாம் இந்த ஜடம் அல்ல என்று நமக்கு வேதங்கள் போதிக்கிறது. நாமெல்லாம் பிரம்மம், அஹம் பிரம்மாஸ்மி. இது பகவான் சங்கராச்சாரியாரால் உலகிற்கு போதிக்கப்பட்ட நற்செய்தியாகும். நாம் இந்த ஜடமல்ல; நாமெல்லாம் பிரம்மம், ஆன்மீக ஆத்மா.

உண்மையாக ஆன்மீக உணர்வில் நிலைபெறும் பொழுது நம்முடைய குணங்களில் அல்லது அறிகுறிகளில் மாற்றங்கள் தோன்றும். அந்த அறிகுறிகள் யாவை? ஒருவன் தன்னுடைய ஆன்மீக உணர்வில் நிலை பெற்றுவிட்ட பிறகு, அவனுக்கென்று

ஆசையோ, வருத்தமோ இருக்காது. வருத்தம் என்பது இழப்பிற்காக, ஆசை என்பது ஒன்றை அடைவதற்காக.

இரண்டு விதமான வியாதிகள் இந்த பௌதிக உலகை விவரிக்கிறது: நம்மிடம் எது இல்லையோ அதற்காக நாம் ஆசைப்படுவது, "எனக்கு இந்தப் பொருட்கள் கிடைத்தால் நான் இன்பமாக இருப்பேன். என்னிடம் பணம் இல்லை, அதனால் எனக்கு ஒரு பத்து லட்ச ரூபாய் கிடைத்தால், எனக்கு இன்பமாக இருக்கும்". நம்மிடம் பத்து லட்சம் ரூபாய் பணம் இருக்கிறது என்று வைத்துக் கொள்வோம். எப்படியோ அது தொலைந்து விட்டது. அப்பொழுது, "அய்யய்யோ பணத்தை தொலைத்து விட்டேனே" என்று அழுகிறோம். நாம் பணம் சம்பாதிப்பதற்காக ஆசைப்படுவது என்பது ஒரு விதமான துன்பம். அதே போல் தான் இழப்பிற்காக வருத்தப்படுவதும் ஒருவிதமான துன்பம். ஆனால் நாம் பிரம்ம பூத நிலையில் இருக்கும் பொழுதோ ஆசைப்படுவதோ அல்லது கவலைப்படுவதோ இல்லை. நாம் ஒவ்வொருவரையும், ஒவ்வொன்றையும் சமமாக காண்போம். நாம் தீவிரமான குழப்பத்தின் நடுவில் இருந்தாலும் அதனால் நாம் கவலைப்பட மாட்டோம். இதுவே சத்வ குணமாகும்.

பாகவதம் என்றால் கடவுளின் விஞ்ஞானமாகும். எனவே ஒருவன் கடவுளின் விஞ்ஞானத்தில் தொடர்ந்து முயற்சி செய்வானாயின், அவன் பிரம்ம பூத நிலையில் நிறுத்தப்படுவான். ஒருவன் அந்த பிரம்ம பூத நிலையை அடைந்த பின் தன்னுடைய செயல்களை நிறுத்தாமல் தொடர்ந்து செயலாற்றிக் கொண்டே இருக்க வேண்டும் என்று பரிந்துரைக்கப்படுகிறது. நாம் இந்த பௌதிக உடலைப் பெற்றுள்ளவரை, தொடர்ந்து செயலாற்றிக் கொண்டுதான் இருக்க வேண்டும். நம்மால் செயலற்று இருப்பது என்பது முடியாத காரியம். ஆனால் யோக தந்திரங்களை நாம் கடைபிடிக்க வேண்டும். அவ்வாறு கடைபிடித்து அந்த வழியில் நடந்தால், நாம் செய்யும் சாதாரண சில வேலைகளின் இலக்காலும், சூழலாலும் ஏற்படும் கஷ்டங்களிலும் இருந்து

நாம் தப்ப முடியும். ஒரு சில நேரங்களில் ஒருவன் தான் செய்யும் தொழில் தொடர்ந்து நடைபெற வேண்டுமானால் அவன் பொய் சொல்ல வேண்டிவரும். ஆனால் பொய் சொல்வது என்பது அவ்வளவு நல்லதல்ல. எனவே அவன் தான் செய்யும் தொழிலில் அறம் சம்பந்தமான கோட்பாடுகள் இல்லாததால் அவன் அதை விட்டுவிடுகிறான். ஆனால் பகவத் கீதையில் சொல்லப்படும் அறிவுரை என்னவென்றால், நாம் அந்தத் தொழிலை விடக்கூடாது என்பதாகும். ஒரு நேர்மையற்ற செயலை செய்யாமல் ஒருவன் தம்முடைய தொழிலின் மூலம் வாழ்க்கைத் தேவையைப் பூர்த்தி செய்ய முடியாத சூழ்நிலை ஏற்படும் பொழுது, அவன் அந்தத் தொழிலை நேர்மையற்றது என்று விட வேண்டியதில்லை. ஆனால் அந்த செயலை புனிதமாக்க நினைக்க வேண்டும். எவ்வாறு புனிதமாக்குவது? அந்தத் தொழிலின் லாபத்தை தனக்கென்று ஏற்றுக் கொள்ளாமல் அது பகவானுக்கு உரியது என்று அவருக்கு அர்ப்பணிப்பதன் மூலம் புனிதமாக்கலாம்.

ஸுக்ருதா என்றால் புண்ணிய காரியங்கள். துஷ்க்ருதா என்றால் பாவ காரியங்கள். இந்த பௌதிகத் தலத்தில் தான் நாம் புண்ணியத்துடனோ அல்லது பாவத்துடனோ செயல்படலாம். நாம் பாவ காரியங்களையோ, புண்ணிய காரியங்களையோ அல்லது இரண்டும் கலந்த ஒரு காரியத்தையோ செய்யலாம். ஆனால் கிருஷ்ணர் நம்மை மிக உயர்ந்த அறிவுடனோ அல்லது மிக உயர்ந்த பக்தியுடனோ நடந்து கொள்ளுமாறு அறிவுறுத்து கிறார். அத்தகைய அறிவு என்பது என்ன? நான் அந்த மிக உயர்ந்த உணர்வினை சேர்ந்த ஒரு பகுதியே, நான் இந்த உடல் அல்ல என்பதே இந்த உணர்வு. நான் என்னை ஒரு அமெரிக்கன் என்றோ அல்லது இந்தியன் என்றோ என்னை அடையாளம் காட்டிக் கொண்டால், அது நான் ப்பௌதிகத் தலத்திலேயே இருக்கிறேன் என்பதையே காட்டும். நாம் நம்மை இந்தியர்கள், அமெரிக்கர்கள் என்று அடையாளம் காட்டிக் கொள்வதற்கு

பதிலாக, நான் ஒரு தூய்மையான உணர்வு, இன்னும் சொல்லப் போனால் நான் கடவுளின் சேவகன் என்று அறிமுகப்படுத்திக் கொள்ள வேண்டும். கடவுளே மிக உயர்ந்த உணர்வு. நம்முடைய தற்போதைய உணர்தலுக்கு, சேவகன் என்றால் அவரைவிட தாழ்ந்தவன் என்பதே பொருந்தும்.

ஒவ்வொருவரும் தலைவனாக நினைக்கிறார்களே தவிர, சேவகனாக ஆக யாரும் நினைப்பதில்லை. ஆனால் கடவுளுக்கு சேவகனாவது இது போன்றதல்ல. ஏனென்றால் கடவுளின் சேவகன் சில சமயங்களில் அவருக்கே தலைவனாகிறான்.

கடவுளின் சேவகனாக இருப்பது உயிர்வாழியின் உண்மையான நிலைமையாகும். ஆனால் பகவத் கீதையில் ஆசானாகிய கிருஷ்ணர் அர்ஜுனனின் சேவகனாக இருப்பதைப் பார்க்கிறோம். அர்ஜுனன் தேரில் அமர்ந்து கொண்டிருக்க, கிருஷ்ணர் அவனுக்கு சாரதியாக இருக்கிறார். அர்ஜுனன் அந்த தேரின் உரிமையாளன் இல்லை. ஆனால் ஆன்மீக உறவுகளில் நாம் பௌதிக உறவுகளின் கொள்கைகளுடன் ஒட்டிக் கொண்டிருக்கக்கூடாது. ஆன்மீக உலகில் உள்ள அந்த முழு உறவும் நம் பௌதிக உலகில் இருப்பதைப் போல தோன்றினாலும், அது ஜடத்தில் களங்கப்பட்டதல்ல. எனவே அது தூய்மையானது மற்றும் உன்னதமானது. அது பௌதிக உறவுக்கு மாறுபட்ட இயற்கையைக் கொண்டது. நாம் ஆன்மீக வாழ்க்கையில் முன்னேற்றம் அடையும்பொழுது, அந்த ஆன்மீக உலகைப் பற்றிய உண்மை நிலையை அறிவோம்.

இங்கே கடவுள் நமக்கு புத்தி யோகத்தைப் பற்றி கற்பிக்கிறார். நான் இந்த உடல் அல்ல என்ற முழு உணர்வுடன் இருப்பதே புத்தி யோகமாகும். இந்த உணர்வுடன் நடந்து கொள்ளும் பொழுதுதான், நான் இந்த உடலல்ல - நான் உணர்வு என்ற உண்மை நிலையை அடைய முடியும். நாம் இந்த உணர்வின் தலத்தில் நடந்து கொண்டால்தான் நல்ல மற்றும் கெட்ட செயல்களிலிருந்து விடுபட முடியும். இதுவே உன்னத நிலை.

அப்படி என்றால் நாம் நம்முடைய கணக்கில் அல்லாமல் மற்றவருடைய கணக்கில் நடக்கிறோம் - அதாவது மிக உயர்ந்த கணக்கில், நாம் லாபத்திற்கோ, நஷ்டத்திற்கோ உட்படுத்தப்படுவதில்லை. லாபம் கிடைத்தால், நாம் அதனால் கர்வமடையவும் கூடாது. "இந்த லாபம் பகவானுக்கு" என்று நினைக்க வேண்டும். நஷ்டம் ஏற்படும் பொழுது இது நம்முடைய பொறுப்பல்ல என்று நாம் தெரிந்து கொள்ளவேண்டும். இது பகவானுடைய வேலை. இப்படியாக நாம் நினைப்போமேயானால் இன்பமடையலாம். இதற்கு நாம் பயிற்சி செய்ய வேண்டும். அதாவது எல்லாம் பகவானுக்காக (பகவானது கணக்கில்) செய்வது. இந்த உன்னத பண்பை நாம் வளர்த்துக் கொள்ள வேண்டும். இதுவே தற்போதைய சூழ்நிலைகளில் செயல்படுவதற்கான தந்திரமாகும். எப்பொழுதெல்லாம் நாம் உடல் உணர்வின் தளத்தில் செயல்படுகிறோமோ, அப்பொழுது நாம் அந்த செயல்களின் விளைவால் கட்டப்படுகிறோம். ஆனால் நாம் ஆன்மீக உணர்வின் தளத்தில் செயல்படும் பொழுது, நாம் பாவ, புண்ணிய விளைவுகளால் கட்டப்படுவதில்லை. இதுவே செயலை நயம்படச் செய்வதாகும். மனீஷினஹ - இது ஒரு மிகச் சிறந்த வார்த்தையாகும். மனீஷீ (Manisi) என்றால் சிந்தனை மிக்க என்று பொருள். ஒருவன் சிந்தித்தாலொழிய, தான் இந்த உடலல்ல என்பதை உணர முடியாது. ஆனால் ஒருவன் சிறிது சிந்தனை உடையவனாக இருந்தாலும் கூட இதை உணரலாம். "ஓ, நான் இந்த உடலல்ல, நான் ஒரு உணர்வு" என்று உணரலாம்.

சில நேரங்களில், நாம் ஓய்வாக இருக்கும் பொழுது நினைப்போம், "ஓ, இது என்னுடைய விரல், இது என்னுடைய கை, இது என்னுடைய காது, இது என்னுடைய மூக்கு. எல்லாமே என்னுடையது என்று நான் நினைக்கிறேன், ஆனால் அந்த நான், இதற்கு சாதாரணமாக ஒரு சிறிதளவு சிந்தனை தேவைப்படுகிறது. எல்லாமே என்னுடையது என்னுடைய

கண்கள், என்னுடைய விரல், என்னுடைய கை, என்னுடைய, என்னுடைய, என்னுடைய. பிறகு இந்த நான் என்பது என்ன? அந்த நான் என்பது உணர்வு. அதில் தான் நான் சிந்தித்துக் கொண்டிருக்கிறேன், "இது என்னுடையது" இப்பொழுது, நான் இந்த உடல் இல்லை என்றால், எதற்காக நான் இந்த உடலுக்காக செயல்பட வேண்டும்? நான் எனக்காக செயல்பட வேண்டும். அப்படியானால், நான் எப்படி எனக்காக வேலை செய்ய முடியும்? என்னுடைய நிலை என்ன? நான் உணர்வு. ஆனால் எந்த விதமான உணர்வு? தாழ்ந்த உணர்வு - நான் உயர்ந்த உணர்வின் ஒரு பகுதியே. அப்படியானால் என்னுடைய செயல்கள் எப்படி இருக்கும்?

என்னுடைய செயல்கள் மிக உயர்ந்த உணர்வின் வழிகாட்டுதலின் கீழ் இயங்கும். இது ஒரு அலுவலகத்தைப் போன்றது. அங்கே நிர்வாக இயக்குனரே மிக உயர்ந்த உணர்வு. எடுத்துக்காட்டாக, அலுவலகத்தில் ஒவ்வொருவரும் நிர்வாக இயக்குனரின் கீழ் நடக்கிறார்கள். அதனால் அவர்களுக்கு எந்தப் பொறுப்பும் இல்லை. அவர்களது கடமை தங்களுக்கு ஒப்படைக்கப்பட்ட வேலையை செய்வதேயாகும். அந்த வேலை பாவம் அல்லது புண்ணியம் நிறைந்ததா என்பதைப் பற்றி அவர்கள் கவலைப்பட வேண்டியதில்லை. இராணுவத்தில்கூட, இராணுவத் தலைவர் அல்லது சேனைத்தலைவரின் கட்டளை உள்ளது. போர் வீரன் அந்தக் கட்டளையை நிறைவேற்ற வேண்டும். அவன் அதை பாவம் என்றோ, புண்ணியம் என்றோ கருதுவதில்லை. அவன் கட்டளைக்கு ஏற்றார் போல் செயல்பட வேண்டும். அப்பொழுதுதான் அவன் உண்மையான போர் வீரன். சேனைத் தலைவர் கூறுகிறார் "போய் எதிரியைக் கொல்". மேலும் இதற்கு அவனுக்கு பரிசும் கௌரவமும் தரப்படுகிறது. அவனுக்கு பரிசு கொடுக்கப்பட்டது, அவன் கொன்றதற்கு என்று நினைக்கிறாயா? இல்லை - இது அவன் தன் கடமையை செய்ததற்காகக் கொடுக்கப்படுகிறது.

அதே போன்ற நிலைமை தான், இங்கு கிருஷ்ணர் அர்ஜுனனுக்கு கற்பித்த பொழுது நிலவியது. கிருஷ்ணர் தான் மிக உயர்ந்த உணர்வு. நான் உணர்வு, மிக உயர்ந்த உணர்வை சேர்ந்த ஒரு பகுதி. எனவே என்னுடைய கடமை அந்த மிக உயர்ந்த உணர்வின் கீழ் இணங்கி நடப்பதேயாகும். எடுத்து க்காட்டாக நான், இந்த கையை என்னுடைய உடலின் ஒரு பகுதியாக நினைக்கிறேன். இப்பொழுது, அது தன் வழியில் அசைகிறது. "எனக்கு என் கைகள் அசைய வேண்டும், கால்கள் அசைய வேண்டும், கண்கள் திறந்து பார்க்க வேண்டும்". எனவே நான், ஆணையிடுகிறேன், அதற்கேற்றாற் போல் அங்கங்கள் செயல்படுகின்றன. அதேபோல், நாம் எல்லோரும் முழுமுதற் கடவுளைச் சேர்ந்த ஒரு பகுதியே. நாம் இந்த மிக உயர்ந்த உணர்வுடன் இணங்கி செயல்பட நம்மை பயிற்சி செய்து கொள்ள வேண்டும். அப்படி செய்வதால் நாம் பாவ, புண்ணிய செயல்களுக்கெல்லாம் உன்னதமடைவோம். இதுவே நுணுக்கம், இந்த நுணுக்கத்தின் முடிவு என்னவாக இருக்கும்? நாம் பிறப்பு, இறப்பு என்ற கட்டுகளிலிருந்து விடுபடுவோம்.

நவீன கால விஞ்ஞானிகளும், தத்துவவாதிகளும் இந்த பிறப்பு, இறப்பு, நோய், முதுமை என்ற நான்கைப் பற்றி யோசிப்பதேயில்லை. அவர்கள் இதை ஒதுக்கி விடுகிறார்கள். "ஒ, எல்லோரும் இன்பமாக இருப்போம். எல்லோரும் இந்த வாழ்க்கையை அனுபவிப்போம்". ஆனால் மனித வாழ்க்கையானது இந்த பிறப்பு, இறப்பு, நோய், முதுமை என்ற கட்டாகிய பிரச்சனைக்கு தீர்வு காண்பதற்கானது. இந்த நான்கு பிரச்சனைகளுக்கு தீர்வு காணாத நாகரீகம், மனித நாகரீகமே அல்ல.

எனவே இங்கு பகவத் கீதையில் பகவான் கூறுகிறார், கர்மஜம் புத்தி யுக்த: கர்மஜம் என்றால், எப்பொழுதெல்லாம் செயல் இருக்கிறதோ அப்பொழுது அதற்கு சில விளைவும் இருக்கிறது. ஒருவன் தீயதில் செயல்படும்பொழுது, தீய விளைவு இருக்கும்.

ஆனால் விளைவு நல்லதாக இருந்தாலும், தீயதாக இருந்தாலும், அது துன்பமே. நான் என்னுடைய நல்ல செயல்களால் நல்ல பிறப்பையோ, நல்ல உடல் தன்மைகளையோ மற்றும் நல்ல படிப்பையோ பெறலாம். ஆனால் இந்த நல்லவைகளை எல்லாம் பெற்றிருப்பதனால் நான் பௌதிக துன்பமாகிய பிறப்பு, இறப்பு, நோய், முதுமை என்பவைகளிலிருந்து விடுபட்டவன் என்று கூறமுடியாது. நான் ஒரு பணக்காரனாகவோ, அழகான மனிதனாகவோ, கல்வி கற்றவனாகவோ, கௌரவமான குடும்பத்தில் பிறந்தவனாகவோ இருந்தாலும்கூட இந்த பிறப்பு, இறப்பு, நோய், முதுமை என்பதை தவிர்க்க முடியாது.

எனவே, நாம் பாவச் செயல்கள் அல்லது புண்ணியச் செயல்கள் பற்றிக் கவலைப்பட வேண்டாம். நாம் உன்னதச் செயல்களைப் பற்றியே கவலைப்பட வேண்டும். அதுவே நம்மை இந்த பிறப்பு, இறப்பு, நோய், முதுமை என்னும் இந்தக் கட்டுகளிலிருந்து காப்பாற்றும். அதுவே நம்முடைய வாழ்க்கையின் குறிக்கோளாக இருக்க வேண்டும். நாம் நல்லதிற்கோ அல்லது கெட்டதிற்கோ ஆசைப்படக் கூடாது. எடுத்துக்காட்டாக, ஒருவர் நோயினால் அவதிப்படுகிறார் என்று வைத்துக் கொள்வோம். அவர் படுக்கையில் படுத்தபடி, சாப்பிட்டுக் கொண்டும், கசப்பான மருந்துகளை எடுத்துக் கொண்டும், இயற்கையின் அசௌகரியமான நிலையைக் கடந்து கொண்டிருக்கிறார். அவர் செவிலியர்களால் எப்பொழுதும் தூய்மையாக வைத்துக் கொள்ளப்பட வேண்டும்; இல்லை என்றால் அருவருப்பான நாற்றம் அடிக்கத் தொடங்கிவிடும். இந்த நிலையில் இருக்கும் பொழுது நண்பர்கள் சிலர், அவரைப் பார்த்து நீ எப்படி இருக்கிறாய் என்று கேட்டால், "ஆம், நான் நன்றாக இருக்கிறேன்" என்று கூறுவார். நான் நலமாக இருக்கிறேன் என்று அவர் இங்கே கூறுவதன் பொருள் என்ன? கட்டிலில் அசௌகரியமான நிலையில் படுத்தபடி, கசப்பான மருந்துகளை சாப்பிட்டுக் கொண்டு,

நகர முடியாமல் கஷ்டத்தை அனுபவிக்கும் இந்த நேரத்திலும் தான் சந்தோஷமாக இருப்பதாகக் கூறுகிறார். அதே போல் தான் இந்த பௌதிக கொள்கை நிறைந்த வாழ்க்கையிலும், நாம் சந்தோஷமாக இருப்பதாக நினைத்தால், அது முட்டாள்தனமே. இந்த பௌதிக வாழ்க்கையில் இன்பம் என்பதே கிடையாது. இங்கே இன்பத்தை அனுபவிப்பது என்பது கஷ்டமே. இந்த நிலைமையில், நமக்கு சந்தோஷத்திற்கு பொருள் தெரியாது. எனவே தான் இங்கே "மனீஷினஹ" "சிந்தனை மிக்க" என்ற வார்த்தை உபயோகிக்கப்படுகிறது.

நாம் புறம்பான, செயற்கை முறைகளில் இன்பத்தை அடைய முயற்சிக்கிறோம். ஆனால் எவ்வளவு நாள் அது நிலைக்கும்? அது நீடித்திருக்கிறது. நாம் திரும்பவும் கஷ்டத்திற்கு வருவோம். ஒரு வேளை நாம் போதையால் இன்பத்தை பெற நினைக்கலாம். ஆனால் அது நம்முடைய உண்மையான இன்பமல்ல. எனக்கு குளோரோபார்ம் கொடுத்து உணர்விழக்கச் செய்கிறார்கள் என்ற நினைத்துக் கொள்வோம். எனவே எனக்கு அதற்கு பிறகு செய்யப்படும் அறுவை சிகிச்சையில் வலியை உணர முடியாது. வலியை உணராததால் அறுவை சிகிச்சை செய்யப்படவில்லை என்றாகாது. இதுவே செயற்கை, உண்மை இன்பம்; உண்மை வாழ்க்கை என்பது.

பகவத் கீதையில் ஸ்ரீ கிருஷ்ணர் கூறியதைப் போல், உன்னத உணர்வில் நிலைபெற்ற சிந்தனை மிக்கவன், செயல்களின் பலனை ஏற்றுக் கொள்வதில்லை. இதனால் இந்த பிறப்பு, இறப்பு, நோய், முதுமை என்பவை முடிவுக்கு வருகிறது. இந்த முடிவானது, அந்த உண்மை உருவாகிய கிருஷ்ணரிடம், அதாவது இன்பத்தின் இருப்பிடத்திடம் நித்திய பேரானந்தத் திடம் ஒற்றுமை கொள்கிறது. உண்மையில் இங்கேதான் நாம் விரும்பிய உண்மை இன்பம் உள்ளது.



# 2

# பூரண புருஷர்

கிருஷ்ண உணர்வு என்ற இந்த முக்கியமான இயக்கம், எல்லா உயிர்வாழிகளையும் தன்னுடைய மூல உணர்வுக்கு கொண்டு வருவதற்கானதாகும். இது எப்படி பல மனநோய் மருத்து வமனைகள் அமைத்து புத்தி சுவாதீனம் இல்லாதவர்களை தங்களுடைய உண்மை உணர்வு நிலைக்கு திரும்ப கொண்டுவர முயற்சி செய்யப்படுகின்றதோ, அதைப் போன்றே கிருஷ்ண உணர்வு இயக்கமும் இந்த பைத்தியக்கார மக்களை தங்களுடைய உண்மை உணர்வுக்கு அல்லது மூல உணர்வுக்கு கொண்டுவர முயற்சி செய்கின்றது.

எவன் ஒருவன் கிருஷ்ண உணர்வு இல்லாமல் இருக்கிறானோ அவனை நாம் கிட்டத்தட்ட புத்தி சுவாதீனம் இல்லாதவன் என்றே புரிந்துகொள்ள வேண்டும். இந்தியாவில் ஒரு கொலை வழக்கு நடைபெற்றது. அதில் அந்தக் கொலைகாரன், தான் அந்த நேரத்தில் பைத்தியம் ஆகிவிட்டதாகவும், அதனால் என்ன நடந்தது என்பது தனக்கு தெரியாது என்றும் வாதாடினான். எனவே அவன் கூறியது உண்மையா என்பதைக் கண்டறிய அங்கே திறமை வாய்ந்த பொது மனநல மருத்துவர் ஒருவர் அழைக்கப்பட்டார். அந்த மருத்துவர், தான் இது போன்ற வழக்கு களை ஆராய்ந்திருப்பதாகவும், தான் சந்தித்த நோயாளிகளில் கிட்டத்தட்ட எல்லோரும் புத்தி சுவாதீனம் அற்றவர்களே. எனவே இதைக் கருத்தில் கொண்டு, நீதி மன்றம் விரும்பினால் அவரை மன்னிக்கலாம் என்றார்.

ஒரு மிகச் சிறந்த வைஷ்ணவக் கவிஞர் ஒருவர் வங்க மொழியில் கவிதை ஒன்றை எழுதியுள்ளார். ஒரு மனிதனை பேய் பிடித்துவிட்டால், அவன் பேசுவது எல்லாம்

அபத்தமாகவே இருக்கும். அதே போல் தான் இந்த பௌதிக இயற்கை என்னும் பேயின் கீழ் நடத்தப்படுபவன், பேசுவது எதுவாயினும் அபத்தமாகவே இருக்கும்". ஒருவன் சிறந்த தத்துவவாதியாகவோ அல்லது சிறந்த விஞ்ஞானியாகவோ இருக்கலாம். ஆனால் அவன் மாயா, பொய்த்தோற்றம் என்னும் பேயால் பீடிக்கப்பட்டிருந்தால், அவன் எந்தத் தத்துவ ஆராய்ச்சி செய்தாலும், என்ன பேசினாலும் அவை எல்லாம் கிட்டத்தட்ட அபத்தமே.

இந்த கிருஷ்ண உணர்வு இயக்கத்தின் நோக்கமானது, இதற்கு முன் விவரிக்கப்பட்ட மனிதர்களை தங்களுடைய மூல உணர்விற்கு, அதாவது கிருஷ்ண உணர்வாகிய தூய உணர்வுக்கு கொண்டு வருவதாகும். தண்ணீரானது மேகங்களில் இருந்து விழும்போது சுத்தமான, களங்கமற்ற நீராகவே இருக்கிறது. ஆனால் பூமியை தொட்டவுடன் சேற்றுடன் கலந்து ஒரு விதமான நிறத்தை பெற்று விடுகிறது. அதைப் போலவே கிருஷ்ணரைச் சேர்ந்த ஒரு பகுதியான, ஆன்மீக ஆத்மாவாகிய நம்முடைய மூல ஆதாரமான நிலையும் கடவுளைப் போன்றே தூய்மையானது.

பகவத் கீதையில் "மனமவாம்ஸோ ஜீவ லோகே" என்று கூறப்பட்டுள்ளது. அதாவது உயிர்வாழிகளெல்லாம் கிருஷ்ணரை சேர்ந்த ஒரு பகுதியே (பகவத் கீதை 15.7). தங்கத்தின் ஒரு துண்டும் தங்கம் என்பதைப் போல, கடவுள் உடலில் ஒரு துண்டாகிய நாமும் கடவுளின் குணத்தை தழுவிய அளவில் ஒரு அளவுக்கு அவரைப் போன்றே நல்லவர்கள்தான். பகவான் உடலின் ரசாயனக் கலவையும், நமது உடலின் (இந்த பௌதிக உடலிலல்ல; ஆன்மீக உடலில்) ரசாயனக் கலவையும் ஒன்றே. ஆனால் மழை நீரானது நிலத்தில் விழுவதைப் போல் நாமும் கிருஷ்ணரின் பௌதிக சக்தியால் பொய்யாக சிருஷ்டிக்கப்பட்ட இந்த பௌதிக உலகில் விழுகிறோம்.

இயற்கையைப் பற்றி நாம் பேசும்பொழுது, கேள்வி ஒன்றை கேட்க வேண்டும், "இயற்கை யாருடையது?" கடவுளின் இயற்கை. இயற்கை தானாகவே சுதந்திரமாக செயல்படுகிறது என்பது முட்டாள்தனமே. பௌதிக இயற்கை என்பது சுதந்திரமானதல்ல என்று பகவத் கீதை திட்டவட்டமாகக் கூறுகிறது. இயந்திரத்தை பார்க்கும் மனிதன் ஒருவன் அது தானாக இயங்குகிறது என்று நினைக்கிறான், ஆனால் அது அப்படி அல்ல. அதற்கு பின்பு அதை இயக்குபவர் ஒருவர் இருக்கிறார், ஆனால் நம்முடைய கோளாறான பார்வையால் நம்மால் அவரைப் பார்க்க முடிவதில்லை. மிக அழகாக இயங்கும் மின்னணு இயந்திரங்கள் பல இருக்கின்றன. ஆனால் அந்த மின்னணுவுக்குப் பின் அது இயங்குவதற்கான விசையை அழுத்துவதற்கு ஒரு விஞ்ஞானி இருக்கிறார். இது புரிந்துகொள்வதற்கு சுலபமே. இயந்திரமானது ஜடம், எனவே அதனால் சுயமாக இயங்கமுடியாது. ஆனால் ஒரு ஆன்மீக இயக்குதலின் கீழ் அது இயங்க முடியும். ஒரு டேப் ரிக்கார்டர் வேலை செய்கிறது என்றால், அது ஒரு உயிர் வாழியாகிய மனிதனின் வழிநடத்தலின் கீழ் இயங்குகிறது. இயந்திரம் என்பது முழுமையானதே, ஆனால் அதை ஒரு ஆன்மீக ஆத்மா இயக்காத வரையில் அது இயங்காது. அதைப்போலவேதான் இந்த பிரபஞ்ச உருவாக்கலாகிய இயற்கையும் ஒரு மிகப்பெரிய இயந்திரம் என்றுதான் ஏற்றுக்கொள்ள வேண்டும்; ஆனால் இந்த பௌதிக இயற்கையின் பின் கடவுள் இருக்கிறார், அந்தக் கடவுள்தான் கிருஷ்ணர்.

"மயாத்யக்ஷேண ப்ரக்ருதி: ஸூயதே ஸசராசரம்" என்று பகவத் கீதையில் கிருஷ்ணர் கூறுகிறார். "இந்த ஜட இயற்கை எனது மேற்பார்வையின் கீழ் இயங்குகிறது". (பகவத் கீதை 9.10) இரண்டு வகையான உயிர்வாழிகள் உள்ளனர். அசைபவை (மனிதர்கள், மிருகங்கள், எறும்புகள்), அசையாதவை (மரங்கள், மலைகள் போன்றவை). இந்த இருவகையான உயிர்வாழிகளை

நடத்தும் பௌதிக இயற்கையானது எனது வழிநடத்தலின் கீழே இயங்குகிறது என்று கிருஷ்ணர் கூறுகிறார். எனவே ஒரு மிக உயர்ந்த மேற்பார்வையாளர் உள்ளார்.

நவீன நாகரீகத்தில் போதிய அறிவு இல்லாத காரணத்தால் இதைப் புரிந்துகொள்ள முடிவதில்லை. எனவே எங்களது கிருஷ்ண உணர்வு இயக்கம் மக்களுக்கு இந்த அறிவை அளிக்க முயற்சி செய்கிறது. மக்கள் புத்தி சுவாதீனம் அற்றவர்களாக இருக்கிறார்கள். ஏனென்றால் அவர்கள் பௌதிக இயற்கையின் முக்குண விளைவுகளால் வழிநடத்தப்படுகின்றனர். அவர்கள் சாதாரணமான சூழ்நிலையில் இல்லை.

உலகில் பல பல்கலைக்கழகங்கள் உள்ளன, அதுவும் அமெரிக்காவில் பல உள்ளன. அத்தகைய பல்கலைக்கழகங்களில் பல அறிவுத் துறைகள் உள்ளன. ஆனால் அவை ஏன் இதுவரை நாம் கூறிய விஷயங்களைப் பற்றி ஆராய்வதில்லை? அந்த அறிவிற்கான துறை எங்கே உள்ளது?

நான் 1968 ம் ஆண்டில் பாஸ்டன் சென்றபொழுது, மாஸஸூஸட்ஸ் தொழிற்கல்வி பயிலகத்தில் உரையாற்றுவதற்காக அழைக்கப்பட்டேன். அங்கே நான் கேட்ட முதல் கேள்வி, "இறந்த மனிதனுக்கும், உயிர்வாழும் மனிதனுக்கும் இடையேயான வேறுபாட்டை கண்டறிவதற்கான தொழில் நுட்பத் துறை எங்கே உள்ளது?" மனிதன் இறக்கும் பொழுது ஏதோ ஒன்றை இழக்கின்றான். அதை மாற்றுவதற்கான தொழில்நுட்பம் எங்கே உள்ளது? விஞ்ஞானிகள் அதற்காக ஏன் முயற்சிப்பதில்லை? அது மிகவும் கஷ்டமான காரியம் என்று நினைத்து, பலர் அதை ஒதுக்குகிறார்கள். அவர்கள் தூங்குவதற்கும், உண்ணுவதற்கும், இனவிருத்தி செய்வதற்கும், பாதுகாப்பதற்குமான தொழில் நுட்பத்திலேயே சுறுசுறுப்பாக ஈடுபட்டுள்ளனர். இது மிருகங்களின் தொழில்நுட்பம். மிருகங்களும் நன்றாக சாப்பிடவேண்டும், உறங்க வேண்டும்,

உடலுறவு வைத்துக் கொள்ள வேண்டும், பாதுகாக்க வேண்டும் என்பதற்காக தன்னாலான முயற்சியை செய்கிறது.

மனிதர்களின் அறிவிற்கும், மிருகங்களின் அறிவிற்கும் இடையே உள்ள வித்தியாசம் என்ன? இறந்த உடலுக்கும், உயிருள்ள உடலுக்கும் மற்றும் உயிருள்ள மனிதருக்கும், உயிரற்ற மனிதனுக்கும் உள்ள வித்தியாசத்தைப் பற்றிய தொழில்நுட்பத் துறையில் ஆராய்ச்சி செய்வதற்காக தன்னுடைய அறிவை மனிதன் வளர்த்துக் கொள்ள வேண்டும். அந்த அறிவானது கிருஷ்ணரால் பகவத் கீதையின் ஆரம்பத்திலேயே கூறப்பட்டுள்ளது. அர்ஜுனன் கிருஷ்ணரிடம் நண்பர் என்ற முறையிலேயே பேசிக் கொண்டிருந்தார். அவர் கூறுவதெல்லாம் சரியாக இருக்கலாம். ஆனால் அது குறிப்பிட்ட எல்லை வரையே சரியாக உள்ளது. இந்த எல்லைக்கு அப்பால் அறிவு சம்பந்தமான மற்ற விஷயங்களும் உள்ளன. அவைகள் அதோக்ஷஜா என்று அழைக்கப்படுகின்றன. ஏனென்றால் அந்த விஷயத்தை அறிந்து கொள்வதில் நம்முடைய நேரடி பரிமாண பௌதிக அறிவானது தோல்வி அடைகிறது. நம்முடைய சாதாரணமான கண்களால் பார்க்க முடியாதவற்றை எல்லாம் பார்ப்பதற்கு நாம் சக்தி வாய்ந்த மைக்ராஸ்கோப் (பூதக் கண்ணாடியை) உபயோகிக்கிறோம். ஆனால் நம்முடைய உடலின் உள்ளே ஆத்மாவை கண்டறிவதற்கு எந்த பூதக் கண்ணாடியும் இல்லை. ஆனால் அது எப்படியானாலும் ஆத்மா என்பது உள்ளது.

இந்த உடலின் உள்ளே ஒரு முதலாளி இருப்பதாக பகவத் கீதை கூறுகிறது. நானே இந்த உடலின் முதலாளி, மற்றவர்கள் அவரவர்களின் உடல்களின் முதலாளிகள். நான் "இது என்னுடையது" என்று கூறுகிறேன். ஆனால் "நான் இந்தக் கை" என்று கூறுவதில்லை. எனவே, "இது என்னுடைய கை" என்பதால் நான் இந்தக் கையிலிருந்து வேறுபட்டவன். இது "என் புத்தகம்" என்று கூறும் பொழுது, நான் இந்தப் புத்தகத்திலிருந்து வேறுபட்டவன் என்பது தெரிகிறது. அதேபோல் தான் இது

"என்னுடைய மேஜை", "என்னுடைய கண்", "என்னுடைய கால்", "இது என்னுடையது", "அது என்னுடையது". ஆனால் நான் எங்கே? ஒருவன் கேட்கிறான், "நான் எங்கே? நான் யார்?" நான் இந்தக் கேள்விக்கான பதிலை பௌதிக முயற்சியால் தேட முடியாது. எனவே தான் அனைத்துப் பல்கலைக்கழகங்களிலும் இதை ஒதுக்கிவிடுகின்றன. இது மிகக் கடினமான விஷயமாகும்.

பொறியியல் வல்லுநர்கள் குதிரையில்லாத வண்டியைக் கண்டுபிடித்தற்காக மிகவும் பெருமைப்படுகிறார்கள். முதலில் குதிரைகள்தான் வண்டிகளை இழுத்துக் கொண்டிருந்தன, ஆனால் இப்பொழுது கார்கள் வந்துவிட்டதால் விஞ்ஞானிகள் மிகவும் பெருமைப்படுகிறார்கள். "நாம் குதிரையில்லாத வண்டியையும், இறக்கையில்லாத பறவையையும் கண்டுபிடித்துவிட்டோம்" என்று அவர்கள் கூறுகிறார்கள். அவர்கள் விமானங்களுக்காக இறக்கை போன்ற ஒன்றை கண்டுபிடிக்கலாம், ஆனால் அவர்கள் ஆத்மா இல்லாத உடல் ஒன்றை கண்டுபிடிக்கும் போதுதான், அதற்கான பாராட்டைப் பெறுவதற்கு தகுதி உடையவராவார். ஆனால் அது போன்ற ஒரு கண்டுபிடிப்பு சாத்தியமானதல்ல, ஏனென்றால் எந்த இயந்திரமும் ஒரு ஆத்மா இல்லாமல் இயங்காது. சொல்லப்போனால் கணிப்பொறியை இயக்குவதற்கே ஒரு பயிற்சி பெற்ற மனிதர் தேவைப்படுகிறார். அதைப்போலவே பௌதிக இயற்கை என்று அழைக்கப்படும் இந்த மிகச் சிறந்த இயந்திரமும் ஒரு மிக உயர்ந்த சக்தியால் உருவாக்கப்பட்டதே என்பதை நாம் புரிந்துகொள்ள வேண்டும். அவர்தான் கிருஷ்ணர். விஞ்ஞானிகள் பௌதிக இயற்கையின் முடிவான காரணத்தையோ அல்லது முடிவான இயக்குனரையோ தேடுகிறார்கள். அதைப்பற்றி அவர்கள் பலிதமான கோட்பாடு களையும், கூற்றுக்களையும் முன் வைக்கிறார்கள். ஆனால் அறிவைப்பெறும் வழியே மிகவும் சுலபமானது, பூரணமானதும் ஆகும். ஏனென்றால் நாம் அந்த அறிவை பூரண புருஷராகிய

கிருஷ்ணர் கூறுவதால், நாம் இந்த பிரபஞ்ச இயந்திரத்தின் ஒரு பகுதியாக இந்த பூமி நன்றாக இயங்குவதற்குக் காரணம் அதன் பின் உள்ள ஓட்டுனராகிய கிருஷ்ணரே என்பதை உடனடியாக அறிந்துகொள்கிறோம். எப்படி ஒவ்வொரு இயந்திரத்தின் பின்னும் ஒரு ஓட்டுனர் இருக்கிறாரோ, அதைப்போலவேதான் பௌதிக இயற்கையாகிய இந்த பெரிய இயந்திரத்தின் பின் கிருஷ்ணர் இருக்கிறார்.

நம்முடைய அறிவை பெறும் முறையானது மிக சுலபமானதாகும். கிருஷ்ணரின் புத்தகமாகிய, பகவத் கீதையே பூரண புருஷரால் கொடுக்கப்பட்ட அறிவின் புத்தகமாகும். நாம் அவரை பூரண புருஷர் என்று ஏற்றுக் கொண்டுவிட்ட போதிலும், மற்றவர்கள் அவரை ஏற்றுக்கொள்ளவில்லையே என்று சிலர் விவாதிக்கலாம்; ஆனால் வேத வல்லுநர்களின் சாட்சியப்படி அவர் பூரண புருஷரே. நம்முடைய திடீர் விருப்பத்தால் நாம் கிருஷ்ணரை பூரணமனவராக ஏற்றுக் கொள்வதில்லை. வேத இலக்கியத்தின் ஆசிரியராகிய வியாசரைப் போன்ற பல வேத வல்லுநர்கள் உள்ளனர். அறிவுப் புதையல் வேதங்களில் உள்ளது. வேதங்களின் ஆசிரியரான வியாசதேவர் கிருஷ்ணரை முழுமுதற் கடவுளாக ஏற்கிறார். வியாச தேவரின் குருவாகிய நாரதரும் கிருஷ்ணரை முழுமுதற் கடவுளாக ஏற்கிறார். அவருடைய குருவாகிய பிரம்மா கிருஷ்ணரை மிக உயர்ந்த புருஷராக ஏற்கிறார். பிரம்மா கூறுகிறார் "ஈஸ்வரா: பிரம்மா: கிருஷ்ணா:" மிக உயர்ந்த இயக்குனர் கிருஷ்ணரே.

பிரம்மாவுக்கு இயக்குனர் இல்லை என்று யாராலும் கூற முடியாது. அது சாத்தியமானதல்ல. அவர் எவ்வளவு பெரிய அதிகாரியாக வேண்டுமானாலும் இருக்கலாம், ஆனால் ஒவ்வொருவரின் மேலும் ஒரு இயக்குனர் இருக்கிறார். ஆனால் கிருஷ்ணருக்கு எந்த இயக்குனரும் இல்லை; எனவே தான் அவர் கடவுளாகிறார். அவர் ஒவ்வொருவரின் இயக்குனராவார். ஆனால் அவருக்கு எந்த இயக்குனரும் இல்லை. அந்த

காலத்தில் பலவிதமான பெயர்கள் கொண்ட கடவுள்கள் உள்ளனர். கடவுள்கள் மிக மலிவாகிவிட்டார்கள். அதுவும் குறிப்பாக அவர்கள் இந்தியாவிலிருந்துதான் இறக்குமதி செய்யப்படுகிறார்கள். மற்ற நாடுகளில் உள்ள மக்கள் எல்லாம் அதிர்ஷ்டசாலிகள், ஏனென்றால் அங்கெல்லாம் கடவுள் உருவாக்கப்படுவதில்லை. ஆனால் இந்தியாவில் அநேகமாக அன்றாடம் ஒரு கடவுள் உருவாக்கப்படுகிறார். சில நாட்களுக்கு முன், லாஸ் ஏஞ்சல்ஸுக்கு ஒரு கடவுள் வருவதாகவும், அவரை வரவேற்குமாறு மக்கள் அனைவரும் வேண்டப்படுவதாகவும் என் சீடர்களில் ஒருவர் கூறுகிறார். கிருஷ்ணர் அது மாதிரியான கடவுள் அல்ல. நான் கிருஷ்ணா புத்தகத்தின் முன்னுரையில் குறிப்பிட்டது போல கிருஷ்ணர் என்பவர் மாயாமான ஒரு தொழிற்சாலையில் உருவாக்கப்பட்ட ஒரு விதமான கடவுள் அல்ல. அவர் கடவுள் ஆக்கப்பட்டவர் அல்ல. ஆனால் அவர் கடவுளே.

இந்த பிரம்மாண்டமான பௌதிக இயற்கைக்கும், பிரபஞ்ச உருவுக்கும் பின் கடவுள் இருக்கிறார் - அவர்தான் கிருஷ்ணர் - அவர் அதிகாரபூர்வமாக எல்லோராலும் ஏற்றுக் கொள்ளப்படுகிறார். அந்த அதிகாரபூர்வமானவர்கள் ஏற்றுக்கொண்ட அறிவையே நாமும் ஏற்க வேண்டும். நாம் கல்வி கற்பதற்காக ஒரு ஆசிரியரிடமோ அல்லது ஒரு பள்ளிக்கோ செல்கிறோம் அல்லது சில சமயங்களில் நம்முடைய பெற்றோர்களிடமிருந்தே கற்றுக் கொள்கிறோம். அவர்கள் எல்லாம் அதிகாரபூர்வமானவர்கள். மேலும் அவர்களிடமிருந்து அறிந்து கொள்வதே நமது இயற்கை. நாம் நம்முடைய குழந்தைப் பருவத்தில் தந்தையைப் பார்த்துக் கேட்போம், "தந்தையே, இது என்ன?" உடனே அவரும், "இது எழுது கோல்", "இது மூக்குக் கண்ணாடி" அல்லது "இது நாற்காலி". எனவே குழந்தையானது தனது பெற்றோர்களிடமிருந்து கற்றுக் கொள்கிறது - "இது நாற்காலி, இவைகள் மூக்குக்

கண்ணாடிகள், இது எழுதுகோல், இது என்னுடைய சகோதரி, இது என்னுடைய சகோதரர் மற்றும் பல." அதைப் போலவே ஒரு அதிகார பூர்வமானவரிடமிருந்து தகவலைப் பெறும்போது அந்த அதிகாரபூர்வமானவர் ஏமாற்றுபவராக இருக்கக்கூடாது, அப்போதுதான் நாம் பெறும் அறிவு பூரணமாக இருக்கும். மகன் விசாரிக்கும் போது பெற்றோர்கள் துல்லியமான, மற்றும் சரியான பதிலையே கூறுவார்களே தவிர அவனை ஏமாற்ற மாட்டார்கள். நாம் சரியான தகவலை சரியான ஒருவரிடமிருந்து பெறுவதே பூரண அறிவாகும். ஆனால் அதைவிட்டு முடிவை கற்பனைமூலம் அடைய நினைத்தால் அது பூரணமற்றதாகும். அனுமான முறை என்றுமே பூரணமாகாது.

நாம் பூரண புருஷராகிய கிருஷ்ணரிடமிருந்து தகவல்களைப் பெறுவதால், நாம் பேசுவதெல்லாம் பூரணமாகவே இருக்கும். கிருஷ்ணர் அல்லது கிருஷ்ணரை ஏற்றுக் கொண்ட வல்லுனர்கள் பேசாத ஒன்றைக் கூட நாம் கூறுவதில்லை. அதுவே சீடப் பரம்பரை எனப்படும். அதுவே கிருஷ்ண உணர்வாகும். பகவத் கீதையில் கிருஷ்ணர் இந்த முறையிலான அறிவையே பரிந்துரை செய்கிறார். (ஏவம் பரம்பரா ப்ராப்தமிமம் ராஜர்ஷயோ விது:) முன்பெல்லாம் அறிவானது அதிகாரபூர்வமான தூய அரசர்களால் பரம்பரை பரம்பரையாக எடுத்துச் சொல்லப் பட்டது. தற்காலங்களில் அரசாங்கமோ அல்லது ஜனாதிபதியோதான் அதிகாரபூர்வமாக உள்ளனர். ரிஷிகளே முன்பெல்லாம் அரசர்களாகவோ அல்லது அதிகாரபூர்வமானவர்களாகவோ இருந்தனர் - அவர்கள் சாதாரணமான மனிதர்களாக அல்லாமல், மிகச் சிறந்த கற்றறிந்த பண்டிதர்களாகவோ, பக்தர்களாகவோ இருந்தனர். இந்த முறையான அரசாங்கம் மிக நன்றாக இருந்தது. ஒரு திறமை வாய்ந்த நல்ல பயிற்சி பெற்ற அரசாங்கத் தலைவனால் அரசின் செயல்களை மிக அமைதியான முறையில் நிறைவேற்ற முடியும்.

அத்தகைய அரசர்கள் பூரணத்துவம் அடைந்ததைப் பற்றி பல சம்பவங்கள் வேத நாகரீகத்தில் கூறப்பட்டுள்ளது. அதற்கு துருவ மகாராஜாவே எடுத்துக்காட்டு. அவர் கடவுளைக் காண்பதற்காக காட்டிற்குச் சென்றார். அங்கே கடுமையான தவத்தாலும், சடங்குகளாலும் ஆறு மாதத்திற்குள் கடவுளைக் கண்டார். எப்படி? ஐந்து வயது நிரம்பிய, நேர்த்தியான உடல் கொண்ட அரசரின் மகனாகிய அவர், தன்னுடைய ஆன்மீக குருவாகிய நாரதரின் வழிகாட்டுதலுக்கு ஏற்ப தனியாகக் காட்டிற்குச் சென்றார். காட்டில் அவர், முதல் மாதத்தில் மூன்று நாட்களுக்கு ஒரு முறை சில காய்கறிகளையும், பழங்களையுமே உண்டு கொண்டிருந்தார். அடுத்த மூன்று மாதங்களில் ஆறு நாட்களுக்கு ஒரு முறை சிறிதளவு தண்ணீர் மட்டுமே அருந்திக் கொண்டிருந்தார். பிறகு அந்த மாதத்தைத் தொடர்ந்து வந்த அடுத்த மாதத்தில் அவர் பன்னிரெண்டு நாட்களுக்கு ஒருமுறை சிறிது அளவு காற்றை சுவாசித்து வந்தார். அவ்வாறாக ஒற்றைக் காலில் நின்றபடி கடுமையான இந்த அனுஷ்டானங்களைக் கடைபிடித்து வந்தார். இறுதியாக இந்த ஆறுமாதங்களின் முடிவில் அவர் எதிரில் கடவுள் நேருக்கு நேராக தோன்றினார். இது போன்ற கடுமையான நெறிமுறைகளைக் கடைபிடித்தால் கடவுளை நேருக்கு நேராக நம்மாலும் பார்க்க முடியும். இதுவே வாழ்க்கையின் பூரணத்துவமாகும்.

கிருஷ்ண உணர்வு இயக்கமும் அனுஷ்டானங்களைத் தழுவியதே. ஆனால் அவை முன் கூறப்பட்டதுபோல் அவ்வளவு கடினமானதல்ல. நாங்கள் எங்களது மாணவர்களை முறையற்ற உடலுறவு கொள்ளக் கூடாது என்று அறிவுறுத்து கிறோம், அதனால் நாங்கள் உடலுறவை நிறுத்துகிறோம் என்பதல்ல, ஆனால் அதை நெறிப்படுத்துகிறோம். அவ்வளவு தான். அதேபோலத்தான் நாங்கள் உண்பதையும் நிறுத்தவில்லை. ஆனால் அதை நெறிப்படுத்துகிறோம்; நாங்கள் கிருஷ்ண பிரசாதத்தையே உண்கிறோம். அதாவது முதலில் கிருஷ்ணருக்கு

அர்ப்பணம் செய்யப்பட்ட உணவு. நாங்கள் "சாப்பிடாதே" என்று கூறுவதில்லை, ஆனால் "மாமிச உணவை" சாப்பிடாதே என்று கூறுகிறோம். இதில் என்ன சிரமம்?

கிருஷ்ண பிரசாதமானது பலவகையான நன்கு சமைக்கப்பட்ட பழங்களும், காய்கறிகளும் கொண்டது, எனவே அது சிரமம் என்பதே இல்லை. "தகாத உறவு கொள்ளாதே" என்றால் நாய்களையும், பூனைகளையும் போல் இருக்காதே என்றுதான் அர்த்தம் - அதாவது திருமணம் செய்து கொண்டு ஒரு மனைவியுடனோ அல்லது ஒரு கணவனுடனோ திருப்தியுறு என்பதே பொருள். நம்மை நாமே கட்டுப்படுத்திக் கொண்டு அனுஷ்டானங்களை மேற்கொள்ள முயற்சிக்க வேண்டும், இருந்தும் துருவ மகாராஜாவைப் போல அனுஷ்டானங்களைக் கடைபிடிப்பது என்பது கடினமே. தற்காலத்தில் துருவ மகாராஜாவைப் போல செய்ய முயற்சிப்பது அல்லது நகல் செய்வது என்பது கடினமே. ஆனால் நாம் சொல்லும் வழிமுறையோ கடைபிடிக்க எளிதானது. எனவே ஒருவர் இந்த வழிமுறைகளைப் பின் பற்றினால், ஆன்மீக உணர்வாகிய, கிருஷ்ண உணர்வில் முன்னேற்றம் காணும்போது, அவர்கள் அறிவில் பூரணத் துவத்தை அடைகிறார்கள். தன்னுடைய அடுத்த வாழ்க்கை என்ன என்பதை கூற இயலாத விஞ் ஞானியாகவோஅல்லது தத்துவவாதியாகவோ ஆவதால் என்ன பயன்? கிருஷ்ண உணர்வில் உள்ள இந்த மாணவர்களால் தங்களுடைய அடுத்த வாழ்க்கை என்ன என்பதையும், கடவுள் என்றால் என்ன என்பதையும், நாம் யார், நமக்கும் கடவுளுக்கும் உள்ள உறவு என்ன என்பதையும் மிக எளிதாகக் கூற முடியும். அவர்களுடைய அறிவானது பூரணத்துவம் அடைந்ததே, ஏனென்றால் அவர்கள் அறிவு நிறைந்த பூரணத்துவம் பெற்ற புத்தகங்களாகிய பகவத் கீதையையும், பாகவதத்தையும் படிக்கிறார்கள்.

இதுவே நம்முடைய வழிமுறையாகும். இது மிக சுலபமானதால், எவர் வேண்டுமானாலும் இதைப் பின்பற்றி தங்களுடைய வாழ்க்கையை பூரணத்துவமாக்கிக் கொள்ளலாம். ஆயினும் சிலர் கூறுகிறார்கள், “நான் கல்வி அறிவு அற்றவன்; என்னால் புத்தகங்கள் படிக்க இயலாது” இருந்தும் தன்னுடைய வாழ்க்கையை பூரணத்துவமாக்கிக் கொள்ள சாத்தியக் கூறுகள் இருக்கின்றன. அவன் சாதாரணமாக “ஹரே கிருஷ்ணா” மந்திரத்தை சொல்லலாம். கிருஷ்ணர் நமக்கு ஒரு நாவையும் இரண்டு காதுகளையும் கொடுத்துள்ளார். மேலும் கிருஷ்ணரை நாம் இரண்டு கண்களால் அல்லாமல் நம்முடைய நாவாலே உணர்கிறோம் என்பதை கேட்பதற்கு ஆச்சரியமாக இருக்கும். அந்த நாவிற்குப் பிறகே மற்ற புலன்கள் பின்பற்றுகின்றன, நாவே முதன்மையானது. நாம் நாவை அடக்க வேண்டும். எப்படி? சாதாரணமாக ஹரே கிருஷ்ணா சொல்லுவதாலும், கிருஷ்ண பிரசாதத்தை உட்கொள்ளுவதாலும் அது முடியும்.

ஒருவர் கிருஷ்ணரை புலன் உணர்வாலோ அல்லது ஊக்கத்தாலோ புரிந்துகொள்ள இயலாது. அது சாத்தியமானதல்ல, ஏனென்றால் கிருஷ்ணர் மிக உயர்ந்தவராதலால், அவர் நமது புலன் எல்லைக்கு உட்பட்டவரல்ல. ஆனால் சரணாகதியால் ஒருவர் அவரை புரிந்துகொள்ளலாம். எனவேதான் கிருஷ்ணர் இந்த முறையை பரிந்துரை செய்கிறார். சர்வ தர்மான் பரித்யஜ்ய மாம் ஏகம் சரணம் விரஜ: “மற்ற எல்லா மத வழிபாடுகளையும் கைவிட்டு, சாதாரணமாக என்னையே சரணடை.” (பகவத் கீதை 18.66) நம்மிடம் உள்ள கீழ்ப்படியாத குணமே நமக்குள்ள நோய். நாம் அதிகாரபூர்வமானவர்களை ஏற்றுக்கொள்ள நினைப்பதில்லை. அவ்வாறு இருந்தும், இயற்கை தன்னுடைய வலிமையால் நம்மை ஏற்றுக் கொள்ள வைக்கிறது. நாம் நம்முடைய புலன்களால் இயற்கையின் அதிகாரபூர்வத்தை ஏற்றுக் கொள்ள கட்டாயப்படுத்தப் படுகிறோம். இதுவே மாயை அதாவது

பொய்த் தோற்றம். இருந்தும் நமக்கு ஓரளவு சுதந்திரம் உள்ளது. புலன்களின் அதிகாரபூர்வமான ஆட்சியின் கீழோ அல்லது கிருஷ்ணரின் அதிகாரபூர்வமான ஆட்சியின் கீழோ, என இரண்டில் ஏதாவது ஒன்றைத் தேர்ந்தெடுக்கலாம்.

கிருஷ்ணரே மேம்பட்ட மற்றும் இறுதியான அதிகாரியாவார், அவரே நம்முடைய நித்தியமான நலன் விரும்பியாவார். அவர் என்றுமே நம்முடைய நலன்களுக்காகவே பேசுகிறார். எனவே நாம் ஏதாவது ஒரு அதிகாரத்தை ஏற்றுக் கொள்ள வேண்டிய நிலையில் இருப்பதால், ஏன் கிருஷ்ணருடைய அதிகாரத்தை ஏற்றுக் கொள்ளக் கூடாது? சாதாரணமாக அவருடைய மகிமைகளை பகவத் கீதை, ஸ்ரீமத் பாகவதம் போன்றவற்றிலிருந்து கேட்பதன் மூலமும், அவருடைய நாமங்களை - ஹரே கிருஷ்ணா - உச்சரிப்பதன் மூலமும் நாம் நம்முடைய வாழ்க்கையில் விரைவில் பூரணத்துவத்தை எய்தலாம்.



# 3

# முழு அன்பிற்குரியவர்

**(நெக்டர் ஆப் டிவோஷனலிலிருந்து எடுக்கப்பட்டது)**

பக்தி என்றால் அன்புத் தொண்டு என்ற பொருள். ஒவ்வொரு தொண்டும் தன்னிடம் ஒரு கவர்ந்தீர்க்கும் தன்மையைக் கொண்டுள்ளது, அந்தத் தன்மையே அதை செய்பவரை மேலும் மேலும் அந்தத் தொண்டில் முன்னேற்றம் அடையச் செய்கிறது. இந்த உலகில் உள்ள ஒவ்வொருவரும் நிரந்தரமாக ஏதாவது ஒரு தொண்டில் ஈடுபட்டு உள்ளோம். அந்தத் தொண்டிற்கான ஊக்கம் நாம் அதிலிருந்து பெறும் இன்பத்தாலேயே கிடைக்கிறது. ஒரு கிரஹஸ்தன் தன்னுடைய மனைவி, குழந்தையின்பால் உள்ள பாசத்தால் இரவு, பகலாக உழைக்கிறான். அதேபோல் தான் ஒரு கொடையாளி மிகப் பெரிய குடும்பத்தின் அன்பிற்காகவும், ஒரு தேசியவாதி தன்னுடைய நாட்டிற்கும், நாட்டுமக்களுக்காகவும் உழைக்கிறான்.

கொடையாளி, கிரஹஸ்தன் மற்றும் தேசியவாதி போன்றவர்களை உந்துகின்ற அந்த சக்தி ரசம் என்று அழைக்கப்படுகிறது அல்லது கனிந்த (உறவு) மிக இனிமையான சுவை நிறைந்த ஒன்று என்று அழைக்கப்படுகிறது. பக்தி ரசமாகிய இந்தக் கனியானது பௌதிய தொழிலாளர்களால் அனுபவிக்கப்படுகிற சாதாரண ரசத்திலிருந்து முற்றிலும் மாறுபட்டது.

பௌதிக தொழிலாளர்கள் புலன்நுகர்ச்சி என்று அறியப்படுகின்ற ஒரு விதமான ரசத்தை அனுபவிப்பதற்காக இரவு, பகல் பாராது உழைக்கின்றார்கள். பௌதிக ரசத்தில் உள்ள இன்பமோ அல்லது சுவையோ நிலைத்து இல்லாத காரணத்தால் அவர் தங்களுடைய இன்பத்தை அனுபவிப்பதற்கான

நிலையினை அவ்வப்போது மாற்றக் கூடிய தன்மையில் உள்ளனர். வியாபாரி ஒருவன் வாரம் முழுவதும் வேலை செய்வதால் திருப்தியுறுவதில்லை; எனவே வாரத்தின் முடிவில் தன்னுடைய வியாபாரச் செயல்களை மறக்கக்கூடிய ஒரு இடத் திற்கு செல்ல நினைக்கிறான். இவ்வாறாக வாரக் கடைசி யை தன்னை மறந்த நிலையில் கழித்த பிறகு அவன் மீண்டும் தன்னுடைய நிலையை மாற்றிக் கொண்டு அவனுடைய உண் மையான வியாபாரச் செயல்களை மறுபடியும் தொடங்குகிறான். பௌதிகத் தொடர்பு என்றால் ஒரு சில காலம் வரை குறிப்பான பதவியை ஏற்றுக் கொண்ட பிறகு அதை மாற்றிக் கொள்வது என்பதாகும். அதைப் போல் நிலையற்ற முன்னும் பின்னும் மாறிக் கொண்டே இருக்கும் இந்த நிலையை போகக்க-த்யாக என்ற நுணுக்கமான சொல்லால் அழைக்கிறார்கள். இதன் பொருள், புலன் இன்பம் மற்றும் துறவு என்ற இரண்டிற்கும் இடையே மாறிக் கொள்ளும் நிலை என்பதாகும். ஒரு உயிர்வாழியால் புலன் இன்பத்திலோ அல்லது துறவிலோ இரண்டிலுமே ஸ்திரமாக இருக்க முடியாது. உயிர்வாழியானது உன்னத பகவானின் நித்திய அங்கத் துணுக்கு என்பதால், அவன் இந்த இரண்டில் எவற்றிலுமே இன்பமாக இருக்க முடியாது, ஒரு மாற்றம் தொடர்ந்து கொண்டு இருக்கும்.

புலன் நுகர்ச்சியானது நெடுங்காலத்திற்கு நீடிக்காது, எனவே அது சபல-சுக அல்லது நிலையற்ற இன்பம் என்று அழைக்கப்படுகிறது. எடுத்துக்காட்டாக சாதாரண கிரஹஸ்தன் ஒருவன் இரவு, பகல் பாராது உழைத்து, தன்னுடைய குடும்ப அங்கத்தினருக்கு வேண்டிய வசதிகளை செய்து கொடுத்து வெற்றி காண்கிறான். அதில் அவன் ஒரு விதமான உறவை அனுபவிக்கிறான். ஆனால் இந்த பௌதிக இன்பத்தின் முழு முன்னேற்றமும் அவன் உயிர் பிரிந்த உடனேயே அந்த உடலோடு முடிவடைகிறது. எனவே நாத்திக மனிதர்களுக்கு இறப்பானது கடவுளின் பிரதிநிதியாக ஏற்றுக் கொள்ளப்படுகிறது.

பக்தன் ஒருவன் கடவுள் இருப்பதை பக்தித் தொண்டினால் அறிகிறான், ஆனால் நாத்திகனோ கடவுள் இருப்பதை இறப்பின் ரூபத்தில் அறிகிறான். இறப்பின் போது எல்லாமே முடிந்துவிடுகிறது. மேலும் அவன் புதிய வாழ்க்கையின் புதிய சகாப்தத்தை, புதிய சூழ்நிலையில் தொடங்குகின்றான், இது ஒரு வேளை கடைசியாக நாம் இருந்ததை விட உயர்ந்ததாகவோ அல்லது தாழ்ந்ததாகவோ கூட இருக்கலாம். அரசியல், சமுதாய, தேசிய மற்றும் உலக என்று எந்தத் துறையின் செயலாக இருக்கட்டும், அந்தச் செயல்களின் பலன்கள் வாழ்க்கையின் இறுதியோடு சேர்ந்து அதுவும் அழிந்துவிடும். இது உண்மை.

எப்படியானாலும் பகவானின் உன்னத அன்புத்தொண்டில் அனுபவிக்கப்படுகிற கனிந்த இன்பமாகிய பக்தி ரசம், வாழ்க்கையின் முடிவோடு சேர்ந்து அழிந்துவிடாது. அது என்றுமே இடைவிடாது தொடரும். எனவே அது அமிர்தம் என்று அழைக்கப்படுகிறது, அதாவது அழியாது என்றுமே நித்தியமாக நிலைத்திருக்கக் கூடியது. இது எல்லா வேத இலக்கியங்களிலும் ஊர்ஜிதம் செய்யப்பட்டுள்ளது. பக்தி ரசத்தில் ஒரு சிறிய முன்னேற்றம் கூட பக்தனை, மனித வாழ்க்கையில் கொடுக்கப்பட்டுள்ள சந்தர்ப்பத்தை நழுவ விடாமல் பெரிய ஆபத்திலிருந்து காப்பாற்றுகிறது என்று பகவத் கீதை கூறுகிறது. நம்முடைய குடும்ப வாழ்க்கையால் பெறப்படும் ரசங்களாலோ அல்லது சமுதாயம் என்னும் பெரிய குடும்ப வாழ்க்கையில் பிறர் நலன் கருதும் தன்மை, தயாள குணம், நாட்டுப்பற்று, பொது உடமைக் கொள்கை போன்றவற்றாலோ கூட ஒருவனுடைய அடுத்த வாழ்க்கை மனித வாழ்க்கையாகத்தான் இருக்கும் என்று உத்திரவாதம் கொடுக்க முடியாது. இந்த வாழ்க்கையின் உண்மையான செயல்களால் நாம் நம்முடைய அடுத்த வாழ்க்கைக்கு தயாராகிறோம். உயிர்வாழிக்கு தன்னுடைய தற்போதைய உடலின் செயல்களின் விளைவுக்கு ஏற்பவே அடுத்த பிறவியில் உடல் அளிக்கப்படுகிறது.

வாழ்க்கை சூழ்நிலையின் அடிப்படை கொள்கை என்னவென்றால் நாம் பொதுவாக யாராவது ஒருவரை நேசிக்க வேண்டும் என்ற குணமே. எவராலும் மற்றவர் எவரையாவது நேசிக்காமல் இருக்க முடியாது. இந்த இயற்கை குணம் ஒவ்வொரு உயிர்வாழியிடத்திலும் உள்ளது. சிங்கம் போன்ற மிருகங்களிடத்தும் இந்த குணமானது ஓரளவுக்கு உறங்கிய நிலையிலாவது உள்ளது. எனவே நிச்சயமாக இந்த குணம் மனிதர்களிடமும் உள்ளது. ஆயினும் இந்த அன்பை யாரிடம் செலுத்தினால் நாம் எல்லோரும் இன்பத்தை பெறலாம் என்பதை மறந்துவிட்டோம். தற்பொழுது மனித சமுதாயம் ஒருவருக்கு நாட்டை நேசிப்பதற்கோ அல்லது குடும்பத்தை நேசிப்பதற்கோ அல்லது தன்னையே நேசிப்பதற்கோ தான் சொல்லித் தருகிறது. ஆனால் அந்த அன்பை யாரிடத்தில் செலுத்துவதால் நாம் எல்லோரும் இன்பத்தை பெறலாம் என்பதற்கு எந்தத் தகவலும் இல்லை. நாம் மறந்த அந்த உண்மை கிருஷ்ணரே. மேலும் பக்தித் தொண்டு முறையானது நம்முடைய உண்மையான கிருஷ்ணருக்கான அன்பை தூண்டுவது எப்படி என்பதை சொல்லித் தருகிறது. அதுமட்டுமல்லாமல் நாம் ஆனந்தமயமான வாழ்க்கையை அனுபவிப்பதற்கான நிலையை அடைவதைப் பற்றியும் கூறுகிறது.

ஆரம்ப காலத்தில் குழந்தையானது முதலில் பெற்றோர்களை நேசிக்கிறது, பிறகு சகோதரர்கள், சகோதரிகள், பிறகு தினமும் வளர வளர குடும்பத்தை நேசிக்கிறது. சுற்றத்தை, சமூகத்தை, நாட்டை, தேசத்தை அல்லது முழுமனித சமூகத்தையே கூட நேசிக்கிறது. ஆனால் அந்த அன்பு செலுத்தும் குணமே முழுமனித சமூகத்தையே நேசிப்பதால் கூட திருப்தியுறு வதில்லை; உன்னதமான அன்பிற்குரியவர் எவர் என்பது தெரியும்வரை அந்த அன்பு செலுத்தும் குணமானது பூரணமாக திருப்தியுறுவதில்லை. அந்த அன்பை கிருஷ்ணரிடம் வைக்கும் போது நம்முடைய அன்பு செலுத்தும் குணமானது திருப்தி

அடைகிறது. இந்த கருத்தே கிருஷ்ண உணர்வு விஞ்ஞானத்தின் மொத்த மற்றும் முழு பொருளாகும். இந்த விஞ்ஞானமானது ஐந்து பக்திமயமான உன்னத உறவால் கிருஷ்ணரிடத்தில் அன்பு செலுத்துவது எப்படி என்பதை நமக்குத் தெரிவிக்கிறது.

நம்முடைய அன்பு செலுத்தும் குணமானது ஒளி மற்றும் காற்றின் அதிர்வுகள் விரிவடைவதைப் போல விரிவடைகிறது. ஆனால் அது எங்கே முடிவடைகிறது என்பது நமக்குத் தெரியாது. பக்தி யோகமானது, சுலபமான முறையில் கிருஷ்ணரிடத்தில் அன்பை செலுத்துவதால் எப்படி அனைத்து உயிர்களிடத்தும் அன்பை செலுத்தலாம் என்ற விஞ்ஞானத்தை நமக்குக் கற்பிக்கிறது. ஐக்கிய நாடுகள் சபை போன்றவைகளின் முயற்சியால் கூட நாம் மனித சமுதாயத்தில் அமைதி மற்றும் ஒற்றுமையை கொண்டு வர தவறிவிட்டோம். ஏனென்றால் அவர்களுக்கு சரியான முறை தெரியவில்லை. அந்த முறை சுலபமானதுதான், ஆனால் அதை ஒருவன் நல்ல அறிவோடு புரிந்துகொள்ள வேண்டும்.

எல்லா மனிதர்களும் முழுமுதற் கடவுளாகிய கிருஷ்ணரிடத்தில் சுலபமான மற்றும் இயற்கையான முறையில் அன்பு செலுத்துவது எப்படி என்பதை "பக்தி ரஸாம்ருத ஸிந்து" (Nector of Devotion) தெரிவிக்கிறது. நாம் கிருஷ்ணரிடத்தில் அன்பு செலுத்தக் கற்றுக் கொண்டால் பிறகு நமக்கு உடனடியாகவும் மற்றும் அதே நேரத்திலேயே அனைத்து உயிர்களிடத்தும் அன்பு செலுத்துவது சுலபமாகிவிடும். இது ஒரு மரத்தின் வேருக்கு நீர் ஊற்றுவது அல்லது ஒருவருடைய வயிற்றுக்கு உணவளிப்பதைப் போன்றதாகும். மரத்தின் வேருக்கு நீர் ஊற்றும் முறையையோ அல்லது வயிற்றுக்கு உணவளிக்கும் முறையையோ உலகம் முழுவதும் விஞ்ஞான ரீதியாகவும், செயல்முறை ரீதியாகவும் ஒவ்வொருவரும் அனுபவப்பட்டுள்ளனர். நாம் ஏதாவது உண்ணும் பொழுதோ அல்லது வயிற்றுக்கு உணவிட்ட உடனோ, அந்த செயலால்

உண்டாக்கப்படும் சக்தியானது உடல் முழுவதும் பரவுவதை உணரலாம். அதே போலத்தான் ஒரு மரத்தின் வேருக்கு நீர் ஊற்றும் பொழுது உண்டாகும் சக்தியானது, அது எவ்வளவு பெரிய மரமாக இருந்தாலும் அதன் முழுமைக்கும் விநியோகம் செய்யப்படுகிறது. மரத்தின் ஒவ்வொரு பகுதிக்கும் நீர் ஊற்றுவது என்பது அல்லது உடலின் ஒவ்வொரு பகுதிக்கும் உணவளிப்பது என்பது முடியாத காரியம். உடனடியாக எல்லாவற்றிற்கும், எல்லா இடத்திலும் பிரகாசம் கொடுக்கின்ற விசையை இயக்குவது எப்படி என்பதை "பக்தி ரஸாம்ருத ஸிந்து" நமக்கு கற்பிக்கிறது. இந்த முறையை அறியாத ஒருவன் வாழ்க்கையின் முக்கியமான விஷயத்தை மறந்தவன் ஆகிறான்.

பௌதிக தேவைகளைப் பொறுத்தவரையில், தற்பொழுது மனித நாகரீகமானது சுகமாக வாழ்வதில் மிகவும் முன்னேற்றம் அடைந்துள்ளது. ஆனால் அப்படியும் நாம் இன்பமாக இல்லை. காரணம் நாம் முக்கியமான விஷயம் ஒன்றை மறந்துள்ளோம். நாம் இன்பமாக இருப்பதற்கு வாழ்க்கையின் பௌதிக சுகங்கள் மட்டும் போதாது. இதற்கு ஒரு தெளிவான எடுத்துக்காட்டு அமெரிக்கா: பௌதிக சுகத்திற்காக அனைத்து வசதிகளும் நிறைந்த பணக்கார நாடாகிய இது, வாழ்க்கையில் முற்றிலும் குழப்பமும், ஏமாற்றமும் அடைந்த மனிதர்களை உருவாக்கிக் கொண்டிருக்கிறது. நான் அத்தகைய குழப்பமடைந்த மனிதர்களை, "தி நெக்டர் ஆப் டிவோஷனில்" தெளிவாக வழிகாட்டி உள்ளபடி பக்தித் தொண்டாகிய கலையை அறிந்துகொள்ளுமாறு வேண்டிக் கொள்ளுகிறேன். இதனால் அவர்களுடைய உள்ளத்தில் எரிந்துகொண்டிருக்கும் பௌதிக வாழ்க்கை என்னும் நெருப்பானது உடனடியாக அணைக்கப்படும் என்று நான் உறுதி அளிக்கிறேன்.

நாம் பௌதிக வாழ்வில் முன்னேற்றம் அடைந்திருந்த பொழுதும், நம்முடைய அன்பு செலுத்தும் குணத்தை முழுமையாக திருப்திபடுத்த முடிவதில்லை. நாம் எப்படி இந்த

பௌதிக உலகில் பூரணமாக பக்தித் தொண்டில் ஈடுபட்டு நம்முடைய இந்த வாழ்க்கை மற்றும் அடுத்த வாழ்க்கையின் ஆசைகளை பூர்த்தி செய்து கொள்ள முடியும் என்பதற்கான சில அனுபவமுள்ள குறிப்புகளை இந்த உன்னத விஞ்ஞானம் அளிக்கும். இந்த அறிவானது எந்த விதமான பௌதிக வாழ்க்கையையும் கண்டனம் செய்வதற்கு உருவாக்கப்பட்டதல்ல. ஆனால் இது மதவாதிகளுக்கும், தத்துவவாதிகளுக்கும் மற்றும் மக்களுக்கும் பொதுவாக எப்படி கிருஷ்ணரிடம் அன்பு செலுத்துவது என்ற தகவலைக் கொடுப்பதற்கான முயற்சியே. ஒருவன் பௌதிக முட்டுக்கட்டைகள் இல்லாமல் வாழலாம், ஆனால் அதே சமயத்தில் அவன் கிருஷ்ணரை நேசிப்பதற்கான கலையையும் அறிந்து கொள்ள வேண்டும்.

தற்சமயம் நாம் நம்முடைய அன்பு செலுத்தும் குணத்தைப் பயன்படுத்திக் கொள்வதற்காக பல வழிகளை கண்டு பிடிக்கிறோம். ஆனால் உண்மையில் நாம் அந்த உண்மைக் குறிக்கோளாகிய கிருஷ்ணரை தவறவிட்டுக் கொண்டு தான் இருக்கிறோம். நாம் மரத்தின் அனைத்து பாகங்களுக்கும் தண்ணீர் ஊற்றுகிறோம், ஆனால் வேரை மறந்துவிடுகிறோம். நாம் உடலை ஆரோக்கியமாக வைத்துக் கொள்ள முயற்சி செய்கிறோம், ஆனால் வயிற்றுக்கு உணவளிக்க மறுக்கிறோம்.

கிருஷ்ணரை தவற விடுகிறோம் என்றால் நம்மையே தவற விடுகிறோம் என்றுதான் அர்த்தம். உண்மையில் தன்னை உணர்தலும், கிருஷ்ணரை உணர்தலும் இரண்டும் ஒன்றாக சமமாக சொல்ல வேண்டும். எடுத்துக்காட்டாக, காலையில் தன்னைத்தானே பார்ப்பது என்றால் அது சூரிய உதயத்தையும் பார்ப்பதாகத்தான் அர்த்தம்; சூரிய ஒளி இல்லாமல் ஒருவராலும் தங்களை பார்த்துக் கொள்ள முடியாது. அதைப்போலத்தான், ஒருவர் கிருஷ்ணரை உணராதவரை தன்னை உணர்வதற்கான கேள்விக்கே இடமில்லை.

கிருஷ்ணரே பகவான் ஸ்ரீ கிருஷ்ண சைதன்ய மகாபிரபுவாக 500 ஆண்டுகளுக்கு முன் வங்கத்தில் அவதரித்து, இந்த யுகத்தில் பகவானின் தூய அன்பைப் பெறுவதற்கான வழியை தந்தருளியுள்ளார். சாதாரணமாக எப்பொழுதும் அந்த உன்னத ஒளி அதிர்வாகிய ஹரே கிருஷ்ண ஹரே கிருஷ்ண, கிருஷ்ண கிருஷ்ண ஹரே ஹரே, ஹரே ராம ஹரே ராம, ராம ராம ஹரே ஹரே என்பதை சொல்லுவதன் மூலமும், கேட்பதன் மூலமும் ஒருவர் தன்னுடைய வாழ்க்கையின் இலட்சியத்தை அடையலாம்.

நாங்கள் பல நிறங்களை உடைய, பல மத நம்பிக்கைகளை உடைய மற்றும் பல தரப்பட்ட வாழ்க்கை முறைகளையும் உடைய அனைத்து மக்களையும் வரவேற்கிறோம். எங்களுடன் ஹரே கிருஷ்ணா மகா மந்திரம் உச்சரிப்பதில் கலந்து கொள்ளச் செய்து அதன் உன்னத சக்தியை அனுபவிக்குமாறு செய்கிறோம். எந்த மதத்தினை சேர்ந்தவரும் கடவுளை உணர்வதற்கான இந்த முறையை எடுத்துக் கொண்டால், கிருஷ்ண உணர்வானது அவருடைய கடவுளின் அன்பை வளர்த்து, அவருடைய வாழ்க்கையை பூரணத்துவம் அடையச் செய்யும்.



# ஆசிரியர் குறிப்பு



தெய்வத்திரு அ.ச. பக்திவேதாந்த சுவாமி பிரபுபாதர் 1896ஆம் வருடம் கொல்கத்தாவில் முறையான வைஷ்ணவ குடும்பத்தில் தோன்றினார். பக்தித் தொண்டின் நெறிகளை சிறு வயதிலிருந்தே கற்று வந்த அவர், தனது ஆன்மீக குருவான ஸ்ரீல பக்திசித்தாந்த சரஸ்வதி கோஸ்வாமியினை 1922ஆம் வருடம் கொல்கத்தாவில் முதன்முறையாக சந்தித்தார். அறுபத்து நான்கு கௌடீய மடங்களை நிறுவியிருந்தவரும் புகழ்பெற்ற ஆச்சாரியருமான ஸ்ரீல பக்திசித்தாந்தருக்கு இந்த படித்த இளைஞனை மிகவும் பிடித்திருந்தது, வேத ஞானத்தை பிரச்சாரம் செய்யும் பணிக்கு, அதிலும் குறிப்பாக ஆங்கிலம் பேசும் நாடுகளில் ஆங்கிலத்தில் பிரச்சாரம் செய்வதற்கு, வாழ்வை அர்ப்பணிக்கும்படி அந்த இளைஞனைக் கேட்டுக் கொண்டார். பின்னர், 1933இல் ஸ்ரீல பிரபுபாதர் முறையாக அவரிடம் தீட்சை பெற்று சீடரானார்.

தீட்சை பெற்ற பின்னர், ஸ்ரீல பிரபுபாதர், பகவத் கீதைக்கு விளக்கவுரை எழுதினார், கௌடீய மடத்தின் பணிகளில் உதவி செய்தார், 1944இல் பேக் டு காட்ஹெட் (Back to Godhead) என்ற ஆங்கில பத்திரிகையை மாதம் இருமுறை வெளிவரும்படி தொடங்கினார். அப்பத்திரிகையினை அவரே தனிநபராக

தயார் செய்து, டைப் செய்து, திருத்தியது மட்டுமின்றி தானே விநியோகமும் செய்தார். அப்பத்திரிகை தற்போது அவரது சீடர்களால் தொடர்ந்து ஆங்கிலம் மட்டுமின்றி பல்வேறு மொழிகளிலும் வெளியிடப்பட்டு வருகின்றது. (தமிழில் பகவத் தரிசனம் என்ற பெயரில் வந்து கொண்டுள்ளது.)

ஸ்ரீல பிரபுபாதர் 1950இல் குடும்ப வாழ்விலிருந்து ஓய்வு பெற்று, கற்பதற்கும் எழுதுவதற்கும் அதிக நேரம் வேண்டி, வானபிரஸ்தம் ஏற்றார். புனித ஸ்தலமான விருந்தா வனத்திற்குச் சென்று, அங்குள்ள சரித்திர புகழ்பெற்ற இராதா தாமோதரர் கோவிலில், மிகவும் எளிமையான முறையில் வாழ்ந்து வந்தார். ஆழமான கல்வியிலும் புத்தகம் எழுதுவதிலும் பல வருடங்களை அங்கு கழித்தார், 1959இல் சந்நியாசம் ஏற்றுக் கொண்டு, அவர் தனது வாழ்வின் முக்கியமான பணியினைத் தொடங்கினார்—18,000 ஸ்லோகங்களைக் கொண்ட ஸ்ரீமத் பாகவதத்தினை மொழிபெயர்த்து விளக்கமளிக்கத் தொடங்கினார்.

பாகவதத்தின் மூன்று பகுதிகளை வெளியிட்ட பின்னர், தனது ஆன்மீக குருவின் கட்டளையைப் பூர்த்தி செய்வதற்காக, செப்டம்பர் 1965இல் அமெரிக்கா சென்றார். அதன் பின்னர், ஐம்பதுக்கும் மேற்பட்ட புத்தகங்களின் வடிவில், இந்தியாவின் தத்துவத்தினையும் மதத்தினையும் அதிகாரம் பொருந்திய வடிவில் தனது மொழிபெயர்ப்புகள் மற்றும் விளக்கவுரைகளின் மூலம் வழங்கினார்.

சரக்குக் கப்பலிலிருந்து நியூயார்க் நகரில் முதன்முறையாக இறங்கியபோது, அவரிடம் சற்றும் பணமில்லை. ஏறக்குறைய ஒரு வருட கால சிரமத்திற்குப் பின், அகில உலக கிருஷ்ண பக்தி இயக்கத்தை (The International Society for Krishna Consciousness) 1966ஆம் வருடம் ஜூலை மாதம் நிறுவினார். 1977, நவம்பர் 14ஆம் நாள் இவ்வுலகை விட்டுச் செல்வதற்கு முன், நூற்றுக்கணக்கான கோவில்கள், ஆஸ்ரமங்கள், பண்ணைகள்

போன்றவற்றை நிறுவி, இவ்வியக்கத்தினை உலகெங்கிலும் பரவச் செய்தார். மேற்கத்திய நாடுகளில் முதன்முதலில் குருகுலப் பள்ளியை திறந்த பெருமையும் அவரையே சாரும்.

இந்திய கலாசாரத்தை பரப்புவதற்காக, உலகெங்கிலும் பல்வேறு கோவில்களை நிர்மாணித்த பிறகு, இந்தியாவிலும் மாபெரும் கோவில்களை உருவாக்க ஸ்ரீல பிரபுபாதர் விரும்பினார். மேற்கு வங்காளத்திலுள்ள புனித ஸ்தலமாகிய மாயாப்பூரில், ஒரு மாபெரும் ஆன்மீக நகரத்தை உருவாக்கும் திருப்பணி ஸ்ரீல பிரபுபாதரால் தொடங்கப்பட்டு தொடர்ந்து நடைபெற்று வருகின்றது.

இவற்றிற்கு மத்தியிலும், ஸ்ரீல பிரபுபாதரின் மாபெரும் பொக்கிஷங்கள் என்னும் பெருமையைப் பெறுபவை அவரது புத்தகங்களே. பல்வேறு பணிகளுக்கு மத்தியிலும் எழுதப்பட்ட அப்புத்தகங்கள், ஆழமான தத்துவம், அதிகாரத் தன்மை, தெளிவு ஆகியவற்றின் காரணத்தால், பல்வேறு அறிஞர்களால் போற்றப்பட்டு உலகெங்கிலும் நூற்றுக்கணக்கான பல்கலைக்கழகங்களில் பாடப் புத்தகமாக உபயோகிக்கப்பட்டு வருகின்றன. எண்பது மொழிகளுக்கும் மேல் மொழிபெயர்க்கப்பட்டுள்ள இப்புத்தகங்களால் உலக மக்கள் அனைவரும் பயனடைகின்றனர். 1972இல் ஸ்ரீல பிரபுபாதரால் தொடங்கப்பட்ட பக்திவேதாந்த புத்தக அறக்கட்டளை, உலகின் தலைசிறந்த ஆன்மீக புத்தக நிறுவனமாக இன்று விளங்குகின்றது.

பன்னிரண்டு வருடங்களில் உலகினை பதினான்கு முறை வலம் வந்து மிகவும் வயதான சூழ்நிலையிலும், உலகின் ஆறு கண்டங்களிலும் கிருஷ்ணரைப் பற்றி உரையாற்றி மக்களிடம் ஆன்மீக விழிப்புணர்ச்சியை ஏற்படுத்தினார் ஸ்ரீல பிரபுபாதர்.

ஸ்ரீல பிரபுபாதரின் வாழ்க்கை வரலாற்றுப் புத்தகம், இஸ்கான் கோவில்களில் கிடைக்கும்.

